# அகத்தூய்மை

ஆசிரியர்
திருக்குர்ஆன் விரிவுரையாளர் அல்லாமா
**எஸ்.எஸ்.முஹம்மது அப்துல் காதிர் சாஹிப்**
பாக்கவி(ரஹ்) உத்தமபாளையம்.



வெளியீடு
**இஸ்லாமிய நூல்கள் மலிவுப் பதிப்பு பப்ளிஷர்ஸ் & புக் செல்லர்ஸ்**
பு. எண் 4, ப. எண்84, நைனியப்பன் தெரு, முதல் மாடி,
மண்ணடி, சென்னை-1. செல் 98402 73818.

# அகத்தூய்மை

## பீடிகை

بسم الله الرحمن الرحيم

الحمد لله الذي نحمده ونستعينه ونستغفره ونؤمن به ونتوكل عليه
ونعوذ بالله من شرور انفسنا ومن سيئات اعمالنا من يهده الله
فلا مضل له ومن يضلل فلا هادى له ونشهد ان لا اله الا الله
وحده لا شريك له ونشهد ان محمدا عبده ورسوله

وَمَآ أُبَرِّئُ نَفْسِىٓ ۚ إِنَّ ٱلنَّفْسَ لَأَمَّارَةٌۢ بِٱلسُّوٓءِ
إِلَّا مَا رَحِمَ رَبِّىٓ ۚ إِنَّ رَبِّى غَفُورٌ رَّحِيمٌ ﴿٥٣﴾

"மேலும், என் நஃப்ஸை (மனதை) நான் தூய்மையாக்கவில்லை. நிச்சயமாக நஃப்ஸானது (மனதாகிறது) தீமையைக் கொண்டு ஏவுவதாயிருக்கிறது. (ஆனால்), எனது றப்பு கிருபை செய்ததைத் தவிர. நிச்சயமாக எனது றப்பு மிகப் பிழை பொறுப்பவன்: மிகக் கிருபை செய்பவன். 12:53

ஹளரத் யூசுஃபு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் எகிப்து மன்னரின் அமைச்சரான அஜீஸே மிஸ்ரின் மனைவியர் விஷயத்தில் கூடா ஒழுக்கமாக நடந்து கொண்டார்கள் என்று கிளம்பிய அவதூறில் அவர் குற்றமற்றவர் நிரபராதி என்று வெளியான போது தங்களைப் பற்றி அவர்கள் கூறிக் கொண்ட வார்த்தைகள் மேலே கூறப்பட்டவை. ஹளரத் யூசுஃபு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மேலே கூறிய வார்த்தைகளில் மனம் என்ற ஒரு பதத்தை உபயோகித்திருக்கிறார்கள். இப்பொழுது நாம் இங்கு கவனிக்க வேண்டிய விஷயம் النّفس **அன்னஃப்ஸு** என்ற பதத்தைப் பற்றித்தான்.

நஃப்ஸு என்பதற்கு மனம், ஆன்மா, மூச்சு, ஸ்தூலம், உயிரும் உடலும் சேர்ந்த சீவ சடலம் என்று பல பொருள்களுள. இங்கு மனம் என்ற பொருள் பற்றித்தான் நாம் விஷயத்தை ஆராய வேண்டும். இந்த மனதுக்கும் அறிவுக்கும் இருதயத் துக்கும் ஆன்மாவுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இவை ஒன்றுக்கொன்று உதவியாக உள்ளவை. ஆகையால், இந்நான் கினையும் பற்றிச் சிறிது விளக்குவோம்.

இவற்றை அறபி பாஷையில் العقل **அல் அக்லு, النّفس அன்னஃப்ஸு, القلب அல்கல்பு, الرّوح அர்ரூஹு** என்று அழைக்கின்றனர். இவை ஒவ்வொன்றுக்கும் மெய் ஞானிகள் பின்வரும் இரு பொருள்கள் கூறுகின்றனர்.

**அல்அக்லு:-** மனிதனில் காணப்படும் ஏற்றுக் கொள்ளும் சக்தி என்பது ஒரு பொருள். இச்சக்தியைக் கொண்டுதான் மனிதன் உணர வேண்டியவற்றை உணருகிறான்.



இறைவன் சம்பந்தமான அருபியான ஒரு பொருள் என்பது மற்றொரு பொருள். இதனை **ஹக்கீக்கத்துல் இன்ஸான்** அதாவது மனிதனது அகமியம், தத்துவம் என்று சொல்லலாம். மனிதன் மற்றைய மிருகங்களை விட்டு இவ்வொன்றினால்தான் வேறுபடுகிறான். **அக்லு** என்னும் அறிவு ஒருவனை விட்டு மாறி விட்டால் அவன் பைத்தியக்காரனாகி விடுகிறான். அக்காலத்தில் அவனுக்கு ஏனைய மிருகங்கள் செய்யும் உண்ணல் முதலிய செய்கைகளைத் தவிர வேறு எதுவும் இருப்பதில்லை. இந்த **அக்லுதான்** இம்மை மறுமை வேலைகளில் உடலை வேலை வாங்குகிறது. ஆகவே, மனித உடல் வேலைக்காரனாகவும், அக்லு அதன் எஜமானனாகவும் **யதார்த்தத்தில் இருந்து** வருகிறது. இவ்வக்லுக்குத்தான் **அல்ஆரிஃபு** என்றும் العاقل **அல்ஆக்கி** லென்றும் الجاهل **அல்ஜாஹில்** என்றும், القاصر **அல்காஸிர்** என்றும், الناقل **அல்நாஃபில்** என்றும் அந்தந்தக்கால நிலைக்கு ஏற்றவாறு பெயர்கள் கூறப்படுகின்றன. மெய்ஞான விஷயத்தில் இந்த அக்லு ஈடுபட்டிருக்கும் போது ஆரிஃபு என்றும், இம்மையின் நற்செயல்களில் ஈடுபட்டிருக்கும் போது **ஆக்கில்** என்றும் கல்வியில் ஈடுபட்டிருக்கும் போது **ஆலிம்** என்றும், கல்வியில் ஈடுபடாமல் விலகி இருக்கும் போது **ஜாஹில்** என்றும். மெய்ஞானத்தை விட்டு விலகி இருக்கும் போது **காஸிர்** என்றும், நற்காரியத்தில் பிரவேசிக்காமல் விலகி இருக்கும் போது **நாஃபில்** என்றும் ஞானவான்கள் கூறுகின்றனர்.

**அன்னஃப்ஸு:-** மனிதனிலுள்ள ஒரு தன்மைக்குப் பெயர். இத்தன்மை மேற்கண்ட அக்லுக்கு நேர்மாறானது. கெட்ட குணம் என்று மனித வர்க்கம் எது எதைக் குறிக்கின்றதோ அக்குணங்கள் யாவற்றையும் ஒருங்கே சேர்த்துக் கொண்டுள்ள

தன்மைக்கு இப்பெயரை ஞானவான்கள் கூறுகின்றனர். இது ஒரு பொருள். இறைவன் சம்பந்தமான உருவம் இல்லாத மேற்கண்ட பொருளுக்கும் இப்பெயர் கூறப்படுகிறது. இது இரண்டாவது பொருள்.

**அல்கல்பு:-** (இருதயம்) முட்டை வடிவமான தசைக் கட்டிக்கு இப்பெயர் கூறப்படுகிறது. இது மனிதனின் நெஞ்சில் இருக்கிறது. இறைவன் சம்பந்தமான உருவமற்ற ஒரு பொருளுக்கும் இப்பெயர் கூறப்படுகிறது.

**அர்ரூஹு:-** அதிநுட்பமான **ஸ்தூலத்துக்கு** இப்பெயர் கூறப்படுகிறது. மேலே கூறப்பட்ட இறைவன் சம்பந்தமான **அரூபியான** பொருளுக்கும் இப்பெயர் கூறப்படுகிறது. இவ்வுருவ மற்ற பொருளுக்கு மெய்ஞானிகள் اللطيفة الربانية **அல்லத்தீபே றப்பானியா** என்கின்றனர். இவ்வார்த்தை மேற்கண்ட நான்கிற்கும் பொதுப் பெயராக இருக்கிறது என்பது நினைவில் வைக்கத் தகுந்தது. தவிர, மேற்கண்ட நான்கு வார்த்தைகளும் மனிதனின் நஃப்ஸுக்கும் சொல்லப்படுகின்றன. இந்த நஃப்ஸுதான் பேசுபவனாகவும், சம்பாஷிப்பவனாகவும், நன்மைப் பயன் அளிக்கப்படுபவனாகவும், தீமைப்பயன் அளிக்கப் படுபவனாகவும் யதார்த்தத்தில் இருக்கிறான். இந்தப் புற ஸ்தூலம் அவனைத் தொடர்ந்துதான் நன்மை தீமைப் பயன்களை அனுபவிக்கிறது. உண்மையில் இந்தப் புற ஸ்தூலம் (மனிதனின் சடலம்) அந்த நஃப்ஸுக்கு ஏறு வாகனம்தான்.

**குறிப்பு:-** மெய்ஞானி என்பதற்கு உண்மை அறிவு பெற்றவர் அல்லது தத்துவ ஞானி என்றும் ஞானி என்பதற்கு உள்ளுணர்ந்து காண்பவர், மெய்யறிவு உடையவர், அறிவு



மிகுந்தவர், இறையுணர்வு பெற்றவர் என்றும் சொல்லப்படும். (மௌலானாவின் புதல்வர்)

## النفس நஃப்ஸின் வகைகள்

மெய்ஞானிகள் மனித நஃப்ஸை ஏழு வகைகளாகப் பிரித்திருக்கின்றனர். ஒரு மனிதனுக்கு ஏழு நஃப்ஸுகள் இருப்பதாக இதற்கு அர்த்தஞ் செய்யலாகாது. ஒரு மனிதனுக்கு ஒரு நஃப்ஸுதான் இருக்கிறது. என்றாலும், அதன் நிலைகள் ஏழு வகைகளாக இருக்கின்றன. இந்நிலைகளைக் கவனித்து இது ஏழுவகை என்று பிரிக்கப்பட்டு ஒவ்வொரு வகைக்கும் தனித் தனியே வெவ்வேறு பெயர்கள் இடப்பட்டிருக்கின்றன. இந்த நஃப்ஸுக்கு النفس الناطقة **அன்னஃப்ஸுன் நாத்திக்கா** என்றும், **அல்லத்தீபே றப்பானியா** என்றுங் கூடப் பெயர்கள் கூறுகின்றனர்.

இது மிருக உணர்ச்சிகளிற் சார்ந்து, இச்சைகளின் பால் சென்று கஞ்சத்தனம், தற்பெருமை, பொறாமை, தீயகுணம் போன்ற தீய தன்மைகளுள்ளதாக இருந்தால் இதற்கு النفس الامارة **அன்னஃப்ஸுல் அம்மாறா** என்று பெயர்.

அந்த நஃப்ஸு சத்தியத்தைக் கடைப்பிடிக்க உறுதி கொண்டு, கியாமத்து நாளில் (மறுமையில்) தனக்கு நன்மை செய்வது இன்னது, தீமை செய்வது இன்னது என்பதை உணர்ந்து கொண்டது. என்றாலும், இச்சைகளின் பால் செல்லும் வழக்கமும் கொஞ்சங் கொஞ்சம் அதில் எஞ்சி இருந்தால், அந்நிலையில் அதற்கு النفس اللوامة **அன்னஃப்ஸுல் லவ்வாமா** என்று பெயர்.

இச்சைகளின் பாலுள்ள அற்ப சொற்ப உணர்ச்சியும் மாறி, இச்சைக்கு மாறு செய்யும் சக்தி ஏற்பட்டு العالم القدسي **அல் ஆலமுல் குதுஸி** என்னும் பரிசுத்த உலகின்பால் அதற்குச் சார்புகள் அதிகம் ஏற்பட்டு, الالهام **இல்ஹாம் (ஞான உதிப்பு)** களையும் அடையுமாயின், அதற்கு النفس الملهمة **அன்னஃப்ஸூல் முல்ஹிமா** என்று பெயர்.

அந்த நஃப்ஸுக்கு ஏற்பட்டுள்ள பதட்டங்கள் மாறி அதன் துடிப்புகள் நின்று, இச்சைக்குக் கொஞ்சங் கூட இடங் கிடைக்காமல், அதனை அடியுடன் மறந்து, பழிக்கத் தக்க தன்மைகள் யாவும் நீங்கி விட்டால் அதற்கு النفس المطمئنة **அன்னஃப்ஸூல் முத்ம இன்னா** என்று பெயர்.

இந்நிலையிலிருந்து இன்னும் முன்னேறி இவ்வுலக அந்தஸ்துகளின் பாலுள்ள அன்பு நீங்கி, தனக்குரிய நாட்டங்களத்தனையையும் நீக்கி விடுமாயின் النفس الراضية **அன்னஃப்ஸூர் றாழிய்யா** என்று பெயர்.

இந்நிலையில் இன்னும் அதிக அபிவிருத்தி ஏற்பட்டு, அல்லாஹு தஆலாவின் பால் உள்ள சம்பந்தமும், அவனது திருப்தியைத் தேடுவதும் அபிவிருத்தியடைந்து, தனக்கு வரும் பாக்கியம் நிற்பாக்கியம் ஆகிய இரண்டும் சமமாகத் தோன்று மாயின் அதற்கு النفس المرضية **அன்னஃப்ஸூல் மர்லிய்யா** என்று பெயர்.

அந்த நஃப்ஸு ஏனைய மக்களுக்கு வழி காட்டவும், அவர்களைச் சன்மார்க்கவழியில் நடத்தவும், அவர்களைப் பரிபூரணமாக ஆக்கவும் அவர்கள் பால் செல்லுமாறு கட்டளை யிடப்பட்டால், அதற்கு النفس الكاملة **அன்னஃப்ஸூல் காமிலா** என்று பெயர்.



இவ்வாறான படித்தரங்களுக்கு ஞானவான்கள் المقامات **அல்மக்காமாத்து** என்று பெயர் கூறுகின்றனர்.

அல்லாஹு தஆலாவின் சன்மார்க்க வழியில், பாரமார்த்திகத் துறையில் பல மன்ஜில்கள் (தங்குமிடங்கள்) இருக்கின்றன. இத்துறையிற் செல்பவர்களான السالك **ஸாலிக்குகள்** ஒன்றன்பின் ஒன்றாக இவற்றைக் கடந்து கடைசி மன்ஜிலை (தங்குமிடத்தை) அடைய வேண்டும். இக்கடைசி எல்லையை அடைந்து விட்டால் அப்புறம் السلوك **ஸுலூக்** அதாவது பரமார்த்திக வழி நடத்தல் என்பது இல்லை. ஆனால், التجليات **தஜல்லியாத்து**கள் அதாவது வெளிப்பாடுகள் நின்று விடமாட்டா. இவை மரணத்துக்குப் பின்னருங் கூட வெளியாகும்.

## طريق المقربين தரீக்குல் முகர்ரபீன்

அல்லாஹு தஆலாவின் சமூகத்தை நெருங்கியவர்களின் (முகர்ரபுகளின்) பாதையாகிய இவ்வழி கண்ணுக்குப் புலப்படாதது. சர்வ சாதாரணமாக யாவரும் தெரிந்து கொள்ளக் கூடியவாறு அவ்வளவு பிரபல்யமானதும் அல்ல. இது மறைவானவற்றை மிக அறிந்தவனான அல்லாஹு தஆலாவின் பால் செல்லும் இருதயவழி, ஆதலின், முரீது என்னும் தீட்சை பெற்றவன் அவ்வழியின் அடையாளங்களை நம்ப வேண்டும். அவ்வழியின் பிரகாச வெளிச்சங்களை உறுதி கொள்ள வேண்டும்.

இந்த வழியில் நடக்கும் மெய்ஞான மாணவனின் அதாவது ஸாலிக்கின் நிலை ஹஜ்ஜுக்குச் செல்லும் பிரயாணியின் நிலைக்கு ஒத்திருக்கிறது. ஹஜ்ஜுக்குச் செல்பவர்கள் முதலாவதாக தங்களுக்கு விருப்பமானவற்றைத் துறக்க வேண்டும். அப்புறம்

குடும்பம், பிறந்த அல்லது வாழ்கிற ஊர் ஆகியவற்றை இறைவன் திருப்தியை நாடி விட்டு விட வேண்டும். இதுபோல, பரமார்த்திக வழியிற் செல்லும் ஸாலிக்கு தனக்கு விருப்பமானவற்றை முதலாவதாகத் துறந்து விட வேண்டும். அப்புறம் தன் இருதயத்தால் பரமார்த்திகத் துறையில் முற்றிலும் ஈடுபட்டு மனமாற்றங் கொள்ள வேண்டும். குடும்பமோ, ஊரோ, நண்பர்களோ தனக்கு சந்தோஷத் தையும் மகிழ்ச்சியையும் உண்டு பண்ணக் கூடாது. இவர்கள் மீதுள்ள பற்றை நீக்கி விட வேண்டும். மேலும், நட்பு தோழமை ஆகியவற்றையும் மாற்றிக் கொள்ள வேண்டும்.

பின்னர், இவருக்குக் கட்டமுது (கட்டுச் சாதம்) தேவை. التقوى தக்வா என்னும் பயபக்திதான் இவருக்குக் கட்டுச் சாதம். வழியில் செல்பவர் பகைவர்களின் ஆபத்தை விட்டுத் தடுத்துக் கொள்வதற்காக ஆயுதங்களையும் தம்முடன் வைத்துக் கொள்ள வேண்டும். ஸாலிக்கானவருக்கு ஆயுதம் الذكر **திக்ரு**தான். வழியில் சிரமமில்லாமல் செல்வதற்கு வாகனம் இன்றியமையாதது. ஸாலிக்கானவருக்கு வாகனம் الهمة **ஹிம்மத்து** என்னும் மனத்தென்பும் துணிகரமும் ஆகும். இத்தன்மைகள் இருந்தால்தான் முரீதானவர் உன்னதமான படித்தரங்களில் ஏற முடியும். வழியிற் செல்பவருக்கு வழிகாட்டி இருக்க வேண்டும். அவரில்லாவிடில் தான் செல்லும் வழி குறித்த இடத்துக்குச் செல்லும் வழிதான் என்பதற்கான அடையாளங்களும், ஆதாரங்களும் இருக்க வேண்டும். இங்கு முரீதானவருக்கு இவ்வழியில் இட்டுச் செல்லத்தக்க الشيخ المربي **ஷெய்குல் முறப்பீ** என்னும் ஆசிரியர் வேண்டும். ஏனெனில், தக்க ஆதாரமின்றியோ வழிகாட்டியின்றியோ செல்பவர் வழிதவறி படுநாசத்தில் விழுந்து விடக்கூடும் அல்லவா?



திருக்குர்ஆன், ஹதீஸ், ஞானவான்களின் நூல்கள் முதலியவற்றை நேர்முகமாகப் படித்துணர்ந்து சரியான விதத்தில் உள்வாங்கிக் கொள்ளும் அறிவும். கல்வியும் உள்ளவர்களுக்கு ஆதாரம் மட்டும் போதுமானது. அவர் ஆசிரியர் இல்லாமல் இவற்றை ஓரளவு உணர்ந்து கொள்ள முடியும். தனக்கேற்படும் சந்தேகங்களை தன் ஆசிரியருக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம். மற்றவர்களுக்கு இவ்வாறு படித்துணர இயலாததால், அவர்களுடன் ஞானாசிரியர் இருக்க வேண்டும்.

பிரயாணம் செல்பவர் தன்னந் தனியே ஒற்றையில் சென்றால் அவருக்கு வழி தொலையாது. வழியும் கஷ்டமானதாக தோன்றும், இது போலவே முரீதானவருக்கு இவ்வழியிற் செல்லும் தோழர்கள் இருக்க வேண்டும். இவர்கள்தான் பீர்பாய்கள் என்றழைக்கப்படுபவர்கள். பிரயாணம் செல்பவர்கள் கிராமங் களையும் நகரங்களையும் ஒவ்வொன்றாகக் கடந்து குறித்த இடம் போய் சேருவது போல முரீதானவர் மேலே கூறப்பட்ட ஏழு மக்காமாத்துகளையும் ஒவ்வொன்றாகக் கடந்து செல்ல வேண்டும்.

அவற்றில் முதலாவது مقام ظلمة الاغيار **மக்காமுளுல் மத்தில் அக்யார்** என்பது. இதனை **நஃப்ஸுல் அம்மாரா** என்றுங் கூறுவர். இரண்டாவது مقام الانوار **மக்காமுல் அன்வார்.** இதற்கு **நஃப்ஸுல் லவ்வாமா** என்று பெயர். மூன்றாவது مقام الاسرار **மக்காமுல் அஸ்றார்** இதற்கு **நஃப்ஸுல் முல்ஹிமா** என்று பெயர். நான்காவது مقام الكمال **மக்காமுல் கமால்** இதற்கு நஃப்ஸுல் **முத்மஇன்னா** என்று பெயர். ஐந்தாவது مقام الوصال **மக்காமுல் விஸால்** இதற்கு **நஃப்ஸுர் ராலிய்யா** என்று பெயர். ஆறாவது **மக்காமுத் தஜல்லியாத்தில் அஃப்ஆல்.**

مقام تجليات الافعال இதற்கு **நஃப்ஸுல் மர்லிய்யா** என்று பெயர். ஏழாவது **மக்காமுத் தஜல்லியாத்தில் அஸ்மாயி வஸ்ஸிஃபாத்தி.** இதற்கு **நஃப்ஸுல் காமிலா** என்று பெயர்.

தவிர மேற்கண்ட படித்தரங்களில் ஒன்றில் மனிதன் இருக்கும் பொழுது அதற்கு மேலிலுள்ள படித்தரத்தை விட்டு மறைக்கப்பட்டிருப்பான். ஆகவே, முதலாவது படித்தரமாகிய **மக்காமுல் அக்யாரில்** இருக்கும் பொழுது அதற்கடுத்த **மக்காமுல் அன்வாரைப்** பற்றி அவன் அறியமாட்டான். இதுபோல இரண்டாவது படித்தரமாகிய **மக்காமுல் அன்வாரில்** இருக்கும் பொழுது அதற்கடுத்த மூன்றாவது படித்தரமாகிய **மக்காமுல் அஸ்றாரைப்** பற்றி அறிய மாட்டான். இவ்வண்ணம் ஏழாவது படித்தரம் வரையில் தனக்கு மேலிலுள்ள படித்தரத்தைப் பற்றி ஸாலிகானவன் அறியாமல் இருந்து வருவான்.

மேலும், அடியானுக்கும் ஆண்டவனுக்குமிடையில் இருள் பிரகாசம் ஆகியவைகளிலான எழுபது திரைகள் இருக்கின்றன. திரைகள் என்ற வார்த்தை அடியானை உத்தேசித்துக் கூறப்பட்ட தாகும். அல்லாஹுதஆலாவை எதுவும் திரையிட முடியாது. திரைகளால் அவன் தடுக்கப்படுபவன் அல்லன், ஆதலால், அல்லாஹு தஆலாவுக்கு الحجاب **ஹிஜாபு** என்னும் திரைகள் இருப்பதாகவோ, அத்திரைகள் அவனை மறைத்து வைத்திருப்பதாகவோ கொள்ளற்க.

தவிர, ஹிஜாபு என்னும் திரைகள் என்பதற்கு இவ்வுலகில் சர்வ சாதாரணமாக யாரும் உணர்ந்தும் அறிந்தும், பார்த்து மிருக்கிற திரைகள் கருத்தல்ல. மனிதர் வெகுதொலைவில் பிரிந்து விலகி இருப்பதைப் போல் அல்லாஹு தஆலா அடியானை விட்டு



வெகு தொலைவில் பிரிந்திருக்கவுமில்லை. இப்படிப்பட்ட நிலையை விட்டு அவன் தூயவன். இடம், காலம், திசை ஆகியவற்றிற்கு அவன் புறம்பானவன். அவனை இவைகள் கட்டுப்படுத்த முடியாது.

மனிதன் ஞான மார்க்கத்தில் நுழைந்து செல்லுதல் என்பது கண்ணுக்குத் தெரியாததும் ஆத்மார்த்தமானதுமான மேற்கண்ட எழுபது திரைகளையும் கடந்து செல்வதுதான். இவ்வெழுபது திரைகளும் மேற்கண்ட ஏழு மக்காம்களில் அடங்கி இருக்கின்றன. ஆகவே, ஒவ்வொரு மக்காமிலும் பத்துத் திரைகளால் நஃப்ஸு தடுக்கப்பட்டிருக்கிறது.

இப்பத்துத் திரைகளிலும் இரண்டாவது திரையைப் பார்க்கினும் முதலாவது திரை அதிகக் கெட்டியாக இருக்கிறது. இவ்வண்ணம் ஒன்றுக்குப் பின்னாலுள்ள ஒவ்வொரு திரையும் தனக்குப் பின்னாலுள்ள திரையைப் பார்க்கினும் கெட்டியாக இருக்கிறது. இதுபோல ஒவ்வொரு நஃப்ஸும் அதற்குப் பிந்தியுள்ள நஃப்ஸைப் பார்க்கினும் அதிகத் திட்பமாக இருக்கிறது. பொதுவாகத் தெரிந்து கொள்ள வேண்டிய இவ்விபரங்களைக் கூறிய பின் மேற்கண்ட ஏழு மக்காம்களையும் அதிலுள்ள ஏழு நஃப்ஸுகளையும் ஒவ்வொன்றாக விளக்கிக் கூறுவோம்.

## முதல் மக்காம்

இது அன்னஃப்ஸுல் அம்மாறாவுக்குரியது. இதன் السير **ஸைர்** அதாவது நடை அல்லாஹு தஆலாவின் பாலிருக்கிறது. இதன் العالم **ஆலம்** அதாவது உலகம் عالم الشهادة **ஆலமுஷ்ஷஹாதத்து** அதாவது கண்ணுக்குத் தோன்றுகிற உலகம். இதன் المحل **மஹல்லு** அதாவது இடம் الصدر

**அஸ்ஸத்று** அதாவது நெஞ்சு. இதன் அல்ஹால் அதாவது நிலை الميل **அல்மைல்** அதாவது சாய்தல் (சாருதல்). இதன் الوارث **வாரிது** அதாவது வருகை الشريعة **அஷ்ஷரீஅத்து** அதாவது சன்மார்க்கம் ஏற்படுத்திய சட்ட திட்டங்களடங்கிய விதி விலக்குகள். இதன் الجنود **ஜுனூது** அதாவது படைகள் கஞ்சத்தனம், பேராசை, பொறாமை, தற்பெருமை, இச்சை, கோபம், தீயகுணம், அசட்டை, அஜாக்கிரதை, முனைதல், நா, கை முதலிய அங்கங்களால் பிறரை புண்படுத்துதல், கேலி கிண்டல் செய்தல், பகை முதலியவைகளாகும்.

இவைகள் செயற்கை வாசத்தை இயற்கையாக ஏற்றுக் கொள்ளும் பிறவித் தன்மையின் இருள்களில் நிகழ்வன. இதில் சத்தியவானுக்கும் அசத்தியவானுக்கும் இடையில் வித்தியாச மில்லை. நன்மை தீமைகளுக்கிடையில் பாகுபாடு மில்லை. இத்தன்மைகள் யாவருக்கும் ஏற்படுவது சகஜம், இத்தன்மைகள் மூலமாக அல்லாமல் வேறு வகையில் மனிதனுட் பிரவேசிக்க ஷைத்தானுக்குச் சக்தி இல்லை. ஆதலின், அதிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும், அச்சமற்றிருக்கக் கூடாது. இந்த நஃப்ஸுக்கு ஆக்கமளிக்கவோ உதவி புரியவோ கூடாது. எவரேனும் இதனை நோவினை செய்து தூண்டி விட்டால், அதற்கு உதவியாக இருக்கக் கூடாது. எதிராகவே இருக்க வேண்டும்.

இந்த நஃப்ஸு உனக்கு விரோதி என்பது உறுதியாகி விட்டது. ஆதலின், அதன் பலத்தைக் குறைப்பதற்காக உணவு, பானம், தூக்கம் ஆகியவற்றைக் குறைத்துக் கொள்வது அவசியமாகும். இது பலஹீனமடைந்தால்தான் இதனை விட்டுத் தப்பித்துக் கொள்வது உனக்குச் சுலபமாக இருக்கும். இந்த நஃப்ஸை எதிர்த்து எவ்வாறு المجاهدة **முஜாஹதா** (போராட்டம்)



செய்ய வேண்டும் என்பது தனி புத்தகத்தில் இன்ஷா அல்லாஹ் கூறுவோம். என்றாலும், இந்த மக்காமில் நீ لا اله الا الله **லா இலாஹ இல்லல்லாஹ்** என்ற திக்ரை உச்சரிக்க வேண்டும். அதாவது லா என்ற முதல் அட்சரத்தை நீட்டியும், இலா என்பதிலுள்ள இகர உயிரெழுத்தை அழுத்தமாகவும் இறுதி அட்சரமான ஹ என்ற எழுத்தை குறுக்கியும் இலேசான அல்லாஹ்விலுள்ள ஹ என்ற எழுத்தை ஒற்றாகவும் கூற வேண்டும்.

சில மக்கள் இவ்வுச்சரிப்பைச் சரியாகக் கவனிக்காமல் لا يله يلا الله **லா யிலாஹ யில்லல்லாஹ்** என்று உயிர் மெய்யிகரத்தைக் கூறி விடுவர். இப்படி உச்சரித்து கூறுவது கலிமத்துத் தவ்ஹீதல்ல. அதாவது இறைவனின் ஏக தெய்வத் தன்மையைக் குறிப்பிடும் வாக்கியமாக இவ்வாறு கூறினால் இதற்கு நன்மைப்பயனும் இல்லை; எவ்விதக் குணபாடுமில்லை. ஆதலின், உச்சரிப்பை நன்கு கவனித்துக் கொள்ள வேண்டும். இந்த திக்ரை நடக்கும் போதும், உட்கார்ந்திருக்கும் போதும் படுத்திருக்கும் போதும் இதர எல்லா சமயங்களிலும் அதிகமாக கூற வேண்டும். அதினும் அதனை சப்தமிட்டு பலத்துடனும் கூற வேண்டும். ஏனெனில், இந்த திக்ரிலிருந்து நாம் விரும்பும் குணபாட்டை இரவு பகல் எந்நேரத்திலும் அதிகமாகவும் சப்தமிட்டும் கூறாமல் அவை முடியாது. சப்தமில்லாமலும், குறைவாகவும் இதனை கூறுவது முன்னேற்றத்தின் வேகத்தைக் குறைத்து விடும். ஆதலின் எதிர்பார்த்த பலனை விரைவில் பெற முடியாது.

மேற்கண்ட முறைப்படி விடாமல் கூறி வருபவரின் இருதயம் الانوار **அல்அன்வார்** (ஞானப் பிரகாசங்)களால்

நிறம்பி விடும். الاسرار **அல்அஸ்ரார்** (ஞான இரகசியங்) கள் அதில் வைக்கப்படும். இந்த திக்ரைத்தான் இறைவன் தனது வேதத்தில் الكلمة التقوى **அல்கலிமத்துத் தக்வா** என்றும், الكلمة الطيب **அல்கலிமுத்தையிப்** என்றும், الشجرة الطيبة **அஷ்ஷஜரத்துத் தையிபா** என்றும், العروة الوثقى **அல்உர்வத்துல் வுத்க்கா** என்றும் கூறியுள்ளான். இதுதான் திக்ருகளில் மிகச் சிறந்தது. இதனை அல்லாஹு தஆலாவின் கோட்டை என்றுங் கூறுவர்.

இதனைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்.

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ حِصْنِي فَمَنْ دَخَلَ حِصْنِي
أَمِنَ مِنْ عَذَابِي

**லா இலாஹ இல்லல்லாஹ் எனது கோட்டை. எனது கோட்டையினுள் எவர் பிரவேசிக்கிறாரோ அவர் என்னுடைய வேதனையிலிருந்து விடுதலை பெற்று விட்டார்** என்று இறைவன் கூறியதாகக் கூறியுள்ளார்கள்.

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ أَفْضَلُ الذِّكْرِ وَهِيَ الْحَسَنَاتُ
أَسْعَدُ النَّاسِ بِشَفَاعَتِي مَنْ قَالَهَا خَالِصًا
مِنْ قَلْبِهِ



**லா இலாஹ இல்லல்லாஹ் மிக சிறந்த திக்ராகும் (ஜபம்). அதுதான் அழகானவைகள். எனது ஷஃபாஅத்தினால் (பரிந்துரையினால்) மனிதரில் பாக்கியவானாக இருப்பவர் தன் இருதயப் பூர்வமாக அந்தரங்க சுத்தியுடன் அதனைக் கூறியவராவார்.**

مَا مِنْ عَبْدٍ قَالَهَا ثُمَّ مَاتَ عَلٰى ذٰلِكَ إِلَّا دَخَلَ
الْجَنَّةَ وَإِنْ زَنٰى وَإِنْ سَرَقَ وَإِنْ زَنٰى وَإِنْ سَرَقَ
وَإِنْ زَنٰى وَإِنْ سَرَقَ

**ஒரு அடியான் அதனைக் கூறி, பின்னர் அதிலேயே (நிலையாக இருந்து) மரணித்து விடுவாராயின் அவர் சுவர்க்கத்தில் பிரவேசிக்காமலிருப்பதில்லை. அவர் விபச்சாரம் செய்திருந்தாலும் சரியே, இன்னும் அவர் திருடி இருந்தாலும் சரியே, அவர் விபச்சாரம் செய்திருந்தாலுஞ் சரியே, இன்னும் அவர் திருடி இருந்தாலும் சரியே, விபச்சாரம் செய்திருந்தாலுஞ் சரியே, இன்னும் அவர் திருடி இருந்தாலும் சரியே, என்று நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.**

(குறிப்பு:- விபச்சாரம், திருட்டு போன்றவைகள் பெரும் பாபமான காரியங்கள் என்பதிற் சந்தேகமில்லை. இக்காரியங் களில் இரண்டு வித பாபங்கள் இருக்கின்றன. ஒன்று இறைவன் கட்டளைக்கு மாறாக நடந்தது. மற்றொன்று பிறருடைய

பாத்தியதையில் நுழைந்தது. ஆகவே, ஒருவர் அந்தரங்க சுத்தியுடன் லாஇலாஹ இல்லல்லாஹு என்று கூறி, இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவியவுடன் இறைவனின் தெய்வீகத் தன்மையை ஒப்புக் கொண்டு பணிந்து விடுவதால், அதற்கு முன்னர் செய்திருந்த சகல பாவங்களையும் இறைவன் மன்னித்து விடுகிறான். அப்புறம் இஸ்லாமைத் தழுவிய இவ்வடியான் பிறரின் பாத்தியதையில் நுழைந்ததற்காக சம்பந்தப்பட்ட நபருக்கு அந்த பாத்தியதையை திரும்பக் கொடுத்தோ மன்னிப்புப் பெற்றோ நிவர்த்தி செய்து கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் அவன் முன்னர் செய்த விபச்சாரம் திருட்டு போன்ற குற்றங்களுக்காக மறுமையில் தண்டிக்கப்பட மாட்டான். ஆனால், கலிமாச் சொல்லி இஸ்லாமில் சேர்ந்த பின்னர் மறுபடியும் அதே குற்றங்களைச் செய்தால் இவ்வுலகில் ஷரீஅத்துச் சட்டப்படிக்குள்ள தண்டனையை அடைய வேண்டியவனாகிறான். இவ்வுலக ஷரீஅத்தின் தண்டனையை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளாமலிருந்தால் அல்லது சூழ்ச்சியின் மூலம் தப்பித்துக் கொண்டால் மறுமையில் தண்டனையை அவசியம் அனுபவிப்பான். எனவேதான் திருடுபவனோ, விபச்சாரம் செய்பவனோ, மது அருந்துபவனோ மூமினானவனாக இருக்கிற நிலையில் அச்செய்கைகளைச் செய்வதில்லை. அவற்றைச் செய்யும் போது அவனது ஈமான் அவனில் இருப்பதில்லை என்று ஹதீஸ்களில் கூறப்பட்டி ருக்கிறது. தவிர, அல்லாஹுத் தஆலா தனக்கு இணை வைப்பதை மன்னிப்பதில்லை. இதைத் தவிரவுள்ள இதர பாவங்களத்தனையையும் தனக்கு விருப்பப் பட்டவருக்கு மன்னிப்பான் என்று திருக்குர்ஆனிலும் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, பாவச் செயல்களை செய்து விட்டு தௌபா இல்லாமல் மரணிப்பவர்கள் கியாமத்து நாளில் தங்கள் பாவங்களுக்குத்



தக்கவாறு தண்டனையை அனுபவித்து விட்டு இறுதியாக சுவர்க்கத்தில் பிரவேசிப்பார்கள். எவ்விதத்திலும் கலிமாச் சொல்லி இஸ்லாமைத் தழுவிய **முவஹ்ஹிதுகள்** கடைசியாகப் பிரவேசிப்பது சுவர்க்கம்தான். இவ்வுண்மையை இந்த ஹதீஸ் கூறுகிறது.

எவர் (இமாம்) ஜமாஅத்தாக சுப்ஹு தொழுகையை நிறைவேற்றி, பின்னர் சூரியன் உதயமாகும் வரை அல்லாஹு தஆலாவை **திக்ருச்** செய்துகொண்டு அமர்ந்திருந்து, பின்னர் இரண்டு ரக்க அத்துத் தொழுகிறாரோ அவருக்குப் பூர்த்தியான ஒரு ஹஜ்ஜு ஒரு உம்ராவின் கூலி போன்றதிருக்கிறது என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். ஒரு ஹஜ்ஜுடையவும், உம்ராவினுடையவும் கூலியாக மாறி விடுகிறது என்று மற்றொரு ரிவாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

காலைத் தொழுகையிலிருந்து சூரியன் உதயமாகும் வரை அல்லாஹ்வை திக்ரு செய்து கொண்டிருக்கிற கூட்டத் தாருடன் நான் அமர்வது இஸ்மாயீலின் சந்ததியினரில் ஒரு அடிமையை விடுதலை செய்வதைப் பார்க்கினும் எனக்கு அதிகப் பிரியமானது. இன்னும் அஸர்த் தொழுகைக்குப் பின்னர் சூரியன் மறையும் வரை அல்லாஹ்வை திக்ருச் செய்து கொண்டிருக்கிற கூட்டத்தாருடன் நான் அமர்வது இவ்வுலகையும் இதிலுள்ள தையும் பார்க்கினும் எனக்கு அதிகப் பிரியமானது என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி இருக்கிறார்கள்.

இவ்வாக்கியத்தைக் கைவிடாமல் பற்றிக் கொண்டிருப்பவர் அதற்குள்ள அஸ்ராரு என்னும் ஞான இரகசியங்களைக் காண்பார். அவைகள் இத்தனை என்று குறிப்பிட்டுக் கூற

முடியாது. மெய்ஞானிகளிடம் பிரபலமாக இருந்து வருகிற التوحيد الخالص **அத்தவ்ஹீதுல் காலிஸு** (சுத்தமான ஏக தெய்வக் கொள்கை) அவருக்கு அனந்தரமாகக் கிடைக்கும். ஆகவே, விடுதலையை விரும்புபவனே! உனது எஜமானனின் கோட்டைக்குள் பிரவேசித்து, உன்னதமான மக்காமாத்து என்னும் பதவிகளை அடைவதற்காக முஜாஹதா என்னும் அகப்போர் புரிந்து, நியாயமான முறையில் சம்பாதித்த உணவை அருந்தி உனது பிறவிச் சிறையிலிருந்து உன்னை விடுவித்துக் கொள்வாயாக.

பொருட்களின் தன்மைகளை உணர்வதற்குத் தடையாக இருக்கிற அழுக்குகளை நீக்கும் பொருட்டும், அதி நுட்பமான கல்விகளை விளங்கிக் கொள்ளும் பொருட்டும் உனது இருதய கண்ணாடியை சுத்தமாக்குவாயாக. ஏனெனில், இந்த மக்காமில் (நிலையில்) அதுதான் உனது கண்ணாடி. தற்பெருமை, கெட்ட செயல்கள், பேராசை, இச்சை, பிரபல்யமடைதல், பொறாமை, துவேஷம், பகை, கோபம் முதலிய கெட்ட குணங்களையும், அறியாமையையும் உன்னிடம் நீ காண்பாய். இந்த நிலையில் மிக முக்கியமானதும் கடமையானதும் என்னவெனில், அதிகமாக திக்ருச் செய்வதன் மூலம் மறைவானவற்றை உணர்வதை விட்டு இருதயங்களைத் தடுத்து வைக்கிற மேற்கண்ட அசுத்தங்களை அகற்றி, விடுதலை பெறுவதுதான்.

## எச்சரிக்கை

(ஆன்மிக துறவற வழியில் இட்டுச் செல்லும் ஆசிரியர் தன் மாணவனை அவன் الأغيار **அல்அக்யார்** அதாவது அந்நியம் என்ற தூதுகளை விட்டு சுத்தமாக்காமலும், ஞானப்பிரகாசங்கள் என்ற சந்திரன்களின் மூலம் தன்னுடைய الوجود **அல்உஜூது** (உள்ளமை) என்னும் இரவின் இருளை அகற்றி வெளிச்சமாக்காமலும், தன்னுடைய الشهود **ஷுஹூதில்** (ஷுஹூது என்பது இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு அணுவிலும் அல்லாஹு தஆலாவை ஞானக்கண்ணால் காணுதல். ஆனால், அவன் இவற்றில் பாலுஞ் சர்க்கரையும் போல் இரண்டறக் கலந்து விட்டான் என்று நம்புவதும் சொல்லுவதும் கூடாது. இப்படிக் கலப்பது அவனது ஏக தெய்வக் கொள்கைக்கு விரோதமானது. இவ்வண்ணம் ஞானக்கண்ணால் பார்த்து ஆராய்வதற்கு முஷாஹதா என்று அறபியிற் கூறுவர்). தன் உடலை விட்டு தன் உஜூதில் மறையாமலும் இருக்கும் வரை ஒரு இஸ்மிலிருந்து இரண்டாவது இஸ்முக்கு (ஒரு திக்ரிலிருந்து மற்றொரு திக்ருக்கு) மாற்றுவது கூடாது.



ஆகவே, இந்த இஸ்முடைய படியிலேயே அவன் (சிஷ்யன்) தனக்கிடப்பட்ட அலுவலில் ஈடுபட்டு ஆத்மார்த்த படித்தரங்களில் முன்னேறிக் கொண்டே இருப்பான்.).

அவனது ஆத்மார்த்தம் திரையின்றியே அவனை அழைத்துத், தெளிவான மொழியில் உரையாடும்வரை இவ்வண்ணம் அவன் தனக்குரிய ஞானச்சுடரைக் கொளுத்திக் கொண்டே இருக்க வேண்டும். இந்த உரையாடல் ஏற்பட்டு விட்டால் தன்னுடைய ஆலமுஷ் ஷஹாதத்தில் (கண்ணுக்குத் தோன்றுகிற உலகில்) அவன் சிறப்புப் பெற்று விடுவான். அவனது பிறவித் தன்மைகளைக் களைய வைத்து அவனது பேற்றுக்குரிய தலை கிரீடத்தை அவனுக்கு அவனது ஸஆதத்து (பாக்கியம்) அணிவிக்கும்.

நஃப்ஸுக்குரிய இந்த ஆபத்துகளை விட்டு உன்னை விடுவிப்பதில் நீ ஈடுபட்டு, புகழத்தக்க சிறந்த தன்மைகளை உன்னில் உற்பத்தி செய்து, மேற்கண்ட தீய குணங்களை மாற்றி

விட்டால், இவ்வுலகத்தின் சில அதிசயங்களையும், மனிதத்துவம் என்ற சிப்பிக்குள் மறைந்திருக்கிற இரகசியங்களையும் (ஷுஹூதில்) நேரில் பார்ப்பாய்.

دوائك فيك وماتبصر

وداؤك منك وماتشعر

وتزعم انّك جرم صغير

وفيك انطوى العالم الاكبر

மருந்து உன்னிலிருக்கிறது; அதனை நீ பார்ப்பதில்லை. இன்னும் வியாதி உன்னில் இருக்கிறது. அதனை நீ உணர்வதில்லை. மேலும், நீ ஒரு சிறிய சடலம் என்றெண்ணிக் கொண்டிருக்கின்றாய். ஆனால, இந்த பிரம்மாண்டமான உலகம் உனக்குள் சுருண்டு கிடக்கிறது என்று ஒரு நுண்ணறிவாளரான நிபுணர் கூறி இருப்பதை விளங்கிக் கொள்வாய்.

## இரண்டாவது மக்காம்

இது நஃப்ஸுல் லவ்வாமாவுக்குரியது. இதன் ஸைர் (நடை) அல்லாஹ்வின் பாலில்தான். இதன் ஆலம் (உலகம்) عالم البرزخ **ஆலமுல் பர்ஜக்** அதாவது இவ்வுலகுக்கும் மறு உலகுக்கும் இடையிலுள்ள உலகம். அதன் இடம் அல்கல்பு (இருதயம்) அதன் நிலை, அல்முஹப்பத் (பிரியம்). அதன் வாரிது (வருகை) الطريقة **அத்தரீக்கத்து**. அதன் தன்மை اللوم



**அல்லௌம்** (கண்டனஞ் செய்தல்). சிந்தித்தல், புதுமை படல், மறைவான தற்பெருமை, பிரபல்யத்திலும் தலைமைப் பதவியிலும் பிரியங் கொள்ளல் முதலியவற்றை புறக்கணித் தலாகும். அதாவது நஃப்ஸுல் அம்மாராவின் தன்மைகள் அடியுடன் நீங்காமல் கொஞ்சம் எஞ்சி இருந்து கொண்டிருக்கும். அதே நிலையில் சத்தியம் அசத்தியம் ஆகியவற்றை உள்ளது உள்ளபடி பிரித்தறியும் தன்மையும் இருக்கும். தீய தன்மைகளை ஒதுக்கி நற்குண நன்னடக்கைகளில் ஈடுபட ஆர்வமும் இருந்து வரும். ஷரீஅத்துக்கு இணக்கமாக நடக்கவும், நோன்பு, தொழுகை, தான தர்மம் முதலிய நற்கிரியைகளிலும் இந்த நஃப்ஸு உள்ளவர் ஈடுபடுவார். என்றாலும், அவருள்ளத்தில் கொஞ்சம் தற்பெருமையும், மறைவான முகஸ்துதியும் இருக்கத்தான் செய்யும். ஆதலால், தன்னுடைய நற்கிரியைகளை மற்றவர் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுவார். இவ்வாசையை வெளிக்குக் காட்டாமல் மறைத்துக் கொண்டிருப்பார். உண்மையில் அல்லாஹு தஆலாவுக்காகவே சகல காரியங்களையும் செய்வார். தம்முடைய நற்செயல்களைப் பிறருக்குக் காண்பிக்கவுமாட்டார். ஆயினும், அந்த அமல்களுக்காக தன்னை மற்றவர் புகழ்வதைப் பிரியப்படுவார் "இவ்விதமான பிரியமும் வரக்கூடாதே. இது அந்தரங்க சுத்திக்கு இடைஞ்சல் ஆயிற்றே" என்று நினைத்து வருந்துவார். என்றாலும், இந்த ஆசை அவரை விட்டு அடியுடன் நீங்காது. இது நீங்கி விட்டால் அவர் முக்லிஸானவரே (அந்தரங்க சுத்தியானவர்தான்).

முக்லிஸ்கள் (அந்தரங்க சுத்தியானவர்கள்) பெரிய அபாயத்திலிருக்கிறார்கள். "இவர்களைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

اَلنَّاسُ هَلْكٰى اِلَّا الْعَالِمُوْنَ
وَالْعَالِمُوْنَ هَلْكٰى اِلَّا الْعَامِلُوْنَ
وَالْعَامِلُوْنَ هَلْكٰى اِلَّا الْمُخْلِصُوْنَ وَالْمُخْلِصُوْنَ
عَلٰى خَطَرٍ عَظِيْمٍ

மனிதர் நாசமானவர்களே. ஆனால், ஆலிம்களைத் தவிர, ஆலிம்கள் நாசமானவர்களே. ஆனால், ஆமில் (கற்றபடி நடப்பவர்) களைத் தவிர, ஆமில்கள் நாசமானவர்களே. ஆனால், முக்லிஸ் (அந்தரங்க சுத்தியானவர்) களைத் தவிர முக்லிஸ்கள் பெரும் அபாயத்தில் இருக்கிறார்கள் என்று கூறியுள்ளார்கள்.

அந்தரங்க சுத்தியானவர் என்று புகழ் பெற முக்லிஸ்கள் விரும்புவர். இவ்விருப்பம் தான் الرِّيَاءُ الْخَفِيُّ **அர்ரியாவுல் கஃபிய்யு (மறைவான முகஸ்துதி** ஜனங்களுக்காக செய்வது) الرِّيَاءُ الْجَلِيُّ **அர்ரியாவுல் ஜலிய்யு** (பகிரங்க முகஸ்துதி). மெஞ்ஞான வழியில் நுழைந்த மாணவனே! உன்னிடம் மறைவான முகஸ்துதி இருக்குமாயின் நீ இரண்டாவது மக்காமில் இருப்பதாக உணர்ந்து கொள். உன்னுடைய நஃப்ஸுக்கு நஃப்சுல் லவ்வாமா என்று பெயர் சொல்லப்படும். ஸாலிக்கானவன் அந்தரங்க சுத்தியாகவே அமல்களைப் புரிந்த போதினும், இந்த மக்காமிலுள்ள அவன் அபாயத்தை விட்டு நீங்கி விட முடியாது. ஆதலால், மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.



தங்கள் நஃப்ஸுகளை விட்டு அழிந்து, தங்களுக்கென நிர்ணயிக்கப்பட்டுள்ள வாழ்நாள் முடிவதற்கு முன்னதாகவே மரணித்து, தங்கள் றப்புடன் நிலைத்திட வேண்டும்

البقاء அல்பக்காவை அடைய வேண்டும் என்று விரும்பும் **முகர்ரபுகளின்** ஆத்மார்த்த வழியில் இது இரண்டாவது மக்காமாகும். اهل اليمين **அஹ்லுல்யமீன்** என்று திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள அப்ரார் (நல்லோர்) களுக்கு இது கடைசி மன்ஜிலாகும். இதுதான் இவர்களுக்கு மேன்மையான நிலையுமாகும். எனவேதான் حسنات الابرار سيئات المقربين நல்லோர்களின் நற்செயல்கள் (இறைவன் சமூகத்தை நண்ணியவர்களுக்கு தீய அமல்களாக இருக்கின்றன என்று சொல்லப்படுகிறது. ஏனெனில், முகர்ரபுகள் இந்த இரண்டாவது மக்காமில் நிலைத்து நின்று விடமாட்டார்கள். ஏழாவது மக்காமை அடையும் வரை ஒவ்வொரு மக்காமையும் கடந்து கொண்டிருக்கவே விரும்புவார்கள். ஆதலால், இந்த மக்காமுக்குப்பின் அவர்கள் கடக்க வேண்டிய மக்காம்கள் இன்னும் ஐந்து எஞ்சி இருக்கின்றன.

இந்த இரண்டாவது மக்காமில் மிக அபாயம் இருப்பதால் முகர்ரபுகள் இதில் நிலையாக நிற்க விரும்புவதில்லை. இந்த மக்காமிலுள்ள மிக உயர்ந்த பதவி இக்லாஸ் என்னும் அந்தரங்க சுத்திதான். அந்தரங்க சுத்தியுள்ளவர்கள் மிகவும் அபாயகரமான நிலையில் தான் இருக்கிறார்கள். (தாங்கள் முக்லிஸ்களா அல்லவா என்பதைத் தெரிந்து கொள்வதற்காக) அவர்கள் இக்லாஸை ஷுஹூது செய்வதை ஒழிக்கும் வரையில் அவர்கள் இவ்வபாயத்தை விட்டு நீங்கி விட மாட்டார்கள். ஏனெனில், المحرك **அல்முஹர்ரிக்** ஆட்டி வைப்பவனும் المسكن

**அல்முஸக்கின்** ஒடுங்க வைப்பவனும் அல்லாஹு தஆலாதான். இது அனுபவப் பூர்வமாக ஏற்பட வேண்டிய ஷுஹூது .

இந்த ஷுஹூது முகர்ரபுகளின் பாதையில் சென்றால்தான் கிடைக்கும். அப்ரார்கள் என்னும் நல்லோர்கள் இந்த அந்தஸ்தை அடைய மாட்டார்கள். அவர்களுக்கு இதன் வாடை கூடக் கிடைக்காது. ஏனெனில், தங்களது அமல்களை (தங்கள் சுய முயற்சியால்) தாங்களே செய்து விட்டதாக அவர்கள் கருதுகின்றனர். அச்செயல்களில் இக்லாஸ் என்னும் அந்தரங்க சுத்தி இருக்க வேண்டும் என்பதை விரும்புகிறார்கள். ஆனால், எல்லா செயல்களுக்கும் மெய்யான காரண கர்த்தன் சிருஷ்டிக் கர்த்தாவாகிய அல்லாஹு தஆலாதான் என்பதை அவர்கள் உணர்வதில்லை. ஆதலின், அவர்கள் கஷ்டத்திலும் சங்கடத்திலும் சிக்கிக் கொண்டனர். அவர் துன்பங்கள் நிறைந்த அறையில் நுழைந்தவருக்கு ஒப்பாகிறார்கள். தற்பெருமை அகம்பாவம் தீய குணம் முதலியவற்றை ஏற்படுத்தக் கூடிய புகழ்தான் அவருக்கு இம்சை செய்யக் கூடியது. மேற்கூறப்பட்ட இத்தன்மைகள் கஷ்டம், சங்கடம், குறுகிய மனப்பான்மை ஆகியவற்றை ஏற்படுத்தக் கூடியவைகள்.

அப்ராருகளுக்கும் முகர்ரபுகளுக்கும் இடையிலுள்ள வித்தியாசத்தையும், அப்ராருகள் அடையும் கஷ்ட சங்கடத்துக்கும் முகர்ரபுகள் அடையும் இன்ப சுகத்துக்கும் இடையிலுள்ள வித்தியாசத்தையும் உணர்த்த இங்கு ஒரு உதாரணங் கூறுகிறோம். அவ்வுதாரணத்திலிருந்து இவ்வித்தியாசங்கள் நன்கு விளங்கும்.



ஏராளமான கிளைகளும் கொப்புகளும் உள்ள ஒரு மரம் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இம்மரத்தின் ஒவ்வொரு கிளையும் ஒவ்வொரு வகையான கனியைக் கொடுக்கிறது. ஒவ்வொரு கனியும் மனிதனைக் கொல்லக் கூடிய ஒவ்வொரு வகையான விஷ சக்தியுள்ளதாக இருக்கிறது. மனிதரில் ஒரு கூட்டம் இம்மரத்தின் பக்கமாக வருகிறது. இக்கனிகள் மனிதனைக் கொல்லக் கூடியவைகள். ஆதலால், இந்த அபாயத்திலிருந்து தங்களையும் தங்களைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றி விட வேண்டும் என்ற எண்ணத்தால் அம்மரத்தின் கிளைகளையும் கொப்புகளையும் அக்கூட்டத்தினர் வெட்டி வீழத்தி விட்டுச் செல்கின்றனர். அடியுடன் அதனைத் தொலைக்க வேண்டும் என்று அவர்கள் நினைக்கவுமில்லை. அதற்கு தண்ணீர் கிடைக்காமல் தடுத்து விட வேண்டும் என்று எண்ணினார்களுமில்லை. ஆனால், அதனை விட்டு விடுபடவே விரும்பினர்.

இவர்கள் இப்படிச் செய்ததால் அந்தச் சமயத்தில் ஏற்படக்கூடிய அபாயத்திலிருந்து தங்களையும் தங்களைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றி விட்டனர் என்பதிற் சந்தேகமில்லை. என்றாலும், அந்த மரம் மறுபடியும் தளிர்த்து துளிர் விட்டு பெரும் கொப்புகளையும் கிளைகளையும் தோற்றுவித்து மறுபடியும் பூத்துக் காய்த்து கனியுமல்லவா? இவ்வாறு மறுபடியும் காய்த்தால் அப்புறமும் அதனை வெட்ட வேண்டிய சிரமம் ஏற்படுகிறது. அந்த மரத்தால் அபாயம் நீங்கி விடவில்லை. ஏனெனில், அதற்கு தண்ணீர் கிடைத்துக் கொண்டே இருக்கிறது. இதுதான் அப்ரார்களது நிலை. அவர்கள் மரத்தை அடியுடன் வெட்டித் தொலைக்காமல் மரக்கிளைகளையும் கொப்புகளையும் வெட்டுவதும், அப்புறம் சில காலத்துக்குப் பின்

அது மறுபடியும் காய்க்கும் போது அதன் கிளைகளை வெட்டுவதுமாகவே இருக்கிறார்கள். இப்படியாக அவர்களுக்கு அடிக்கடி அபாயம் கஷ்டம் சங்கடம் இம்சை நிகழ்ந்து கொண்டே இருக்கும். இதற்காக அவர்கள் எப்பொழுதும் முயற்சி எடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். மரத்தை அடியுடன் தொலைக்காமல் விட்டு வைப்பது அடிக்கடி சிரமம் உண்டாக்குகிறது.

வேறு ஒரு கூட்டத்தார் அந்த இடத்துக்கு வருகிறார்கள். அம்மரத்தைப் பார்த்ததும் இது அபாயகரமான மரம் என்பதை உணர்ந்து அம்மரத்தை வேருடன் பிடுங்கி எறிந்து விடுகிறார்கள். பூமிக்குள் ஏதேனும் சில வேர்கள் இருந்து, அதிலிருந்து இது துளிர் விடக்கூடும் என்று நினைத்து, அந்த மரம் இருந்த இடத்துக்கு தண்ணீர் வராமல் தடுத்து எஞ்சியுள்ள அற்ப சொற்ப வேர்களும் கூட உலர்ந்து காய்ந்து போகும்படி செய்து விடுகிறார்கள். இவர்கள் இப்படிச் செய்தமையால் அந்த மரம் நிரந்தரமாக அங்கு இல்லாதொழிந்து விடுகிறது. அவர்களும் அவர்களைச் சேர்ந்த மற்றவர்களும் அதன் அபாயத்திலிருந்து தப்பித்துக் கொள்கிறார்கள்.

இதுதான் முகர்ரபுகளின் நிலை. இவர்கள் தங்களில் தீய குணங்கள் ஏற்படுவதற்கு முற்றிலும் இடங் கொடுக்காமல் அவற்றின் அம்சங்கள் கூட இல்லாதொழித்து விடுகிறார்கள். மரத்தை அடிக்கடி வெட்ட வேண்டிய சிரமம் இவர்களுக்கு ஏற்படுவதில்லை. ஆதலால், இவர்கள் சுகத்தில் இருக்கிறார்கள்.

மரம் என்பதுதான் மனிதனது வயிறு. மனிதன் உட்கொள்ளும் உணவுதான் அந்த மரத்துக்கு பாய்ச்சப்படும் தண்ணீர். பெருமை பொறாமை போன்ற தீயகுணங்கள்தான்



அந்த மரத்தின் கிளைகளும் கொப்புகளுமாகும் இத்தன்மை களினால் விளையும் பலன்தான் அக்கிளைகளில் காய்க்கும் கனிகள். ஏனெனில், அவர்கள் தங்கள் வயிற்றை நிறப்பிய மட்டுக்கு அவர்களின் இச்சைகளை வயிறு மறுபடியும் விருத்தி யாக்கி விடுகின்றது. இச்சை வளர்ந்த அளவிற்கு அவர்களது பஷரிய்யத்து (உடல் இச்சை) பலப்படுகிறது. அவர்களிடம் பிரவேசிக்க ஷைத்தானுக்கு இடங்கிடைத்து விடுகிறது. எனவே பசித்திருத்தலாலும், முஜாஹதாவாலும் (இரவில் விழித்திருந்து வணங்குவதன் மூலம் அகப்போர் புரிவதாலும்) அதனை பலஹீனப்படுத்த வேண்டும்.

வயிறுதான் தீயகுணங்களுக்கும் விஷமங்களுக்கும் உற்பத்தி இடம் என்பதை அந்த முகர்ரபுகள் அனுபவத்தாலும் ஆதாரத்தாலும் அறிந்திருப்பதால், அதன் தீமையை விட்டு விடுதலையடைய முயற்சிக்கின்றனர். எனவே, சலக விதமான இன்னல்களையும் தொந்தரவுகளையும் விட்டு நீங்கி, நிரந்தரமான சுகத்தைப் பெற நாடுவாயாயின் முகர்ரபுகள் நடந்த வழியில் நீயும் நடக்க வேண்டும். அவர்களுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி ஒவ்வொரு படித்தரமாகத் தாண்டி ஏழாவது படித்தரம் வரை முன்னேறிக் கொண்டிருக்க வேண்டும். அங்கு நீ புதுமைகளைக் காண்பாய்.

முன்னேற்றம் என்பது முஜாஹதாவினாலும், இறைவனின் திருநாமத்தைக் கூறுவதாலுமே கிடைக்கும். ஒவ்வொரு மக்காமிலும் அதற்குரிய இஸ்மை அதாவது இறைவனின் திருநாமத்தைக் கூற வேண்டும். எவ்வளவுக்கு அதிகமாக நீ கூறுகின்றாயோ அவ்வளவுக்கு வெற்றி உனக்கு நெருங்கிவரும். இதில் சோம்பலாகவும், அலட்சியமாகவும், தாமதமாகவும் இருந்த அளவுக்கு வெற்றி விலகிச் செல்லும்.

இந்த மக்காமில் நீ இரண்டாவது இஸ்மை அதாவது الله الله **அல்லாஹ் அல்லாஹ்** என்ற திருநாமத்தை கூற வேண்டும். இதனை இரவு பகல் எந்நேரமும் அதிகமாகத் திக்ரு செய்ய வேண்டும். அப்பொழுதுதான் உனக்கு புதுமைகள் வெளியாகும். இறைவனை திக்ரு செய்வதற்கென சில குறிப்பிட்ட நேரங்களை நிர்ணயித்துக் கொண்டு, கிப்லாவை முன்னோக்கிய வண்ணம் அமர்ந்திருந்து, கண்களை மூடிக் கொண்டு, சப்தமிட்டு திக்ரு செய். தலையை உயர்த்தி நெஞ்சுக்கு நேராகத் தாழ்த்தி அல்லாஹ் என்று திக்ரு செய்ய வேண்டும். வலப்புறம் இடப்புறம் திரும்பக் கூடாது. வேகமாக திக்ரு செய்து உச்சரிப்பை மாற்றி هلا هلا **ஹல்லா ஹல்லா** என்று சொல்லக் கூடாது. இப்படிச் சொல்வது திக்ரைச் சேர்ந்ததல்ல. இதனால் எவ்விதப் பிரயோஜனமும் ஏற்படாது.

இந்த திக்ரை அதிகமாக கூறுபவர் மறைவான வற்றையும், ஆலமுல் மலக்கூத்தின் (அமரலோகத்தின்) இரகசியங்களையும் உணருவார். உண்மையில் இதுதான் இஸ்முல் அஃலம். இந்த இஸ்மைக் கொண்டு பிரார்த்தித்தால் பிரார்த்தனை அங்கீகரிக்கப்படும். இதனைக் கொண்டு கேட்டால் கேட்டது கிடைக்கும். ஆனால், நியாயமான முறையில் சம்பாதித்த ஹலாலான உணவை உட்கொள்ள வேண்டும் பரிபூரணமான பாதையில் செல்லவும் வேண்டும்.

இந்த திக்ரை நீ அதிகமாக செய்தல் வேண்டும். இதுதான் ஸெய்யிதுல் அஸ்மா அதாவது திருநாமங்கள் அத்தனைக்கும் தலையாயமைந்தது. நபிமார்கள் சுட்டிக் காண்பிக்கிற ஆண் பிள்ளைகளாகிய ஒலிமார்கள் இறங்கும் இடம். நபிமார்களில் அஸ்பியாக்கள் என்ற வகையைச் சேர்ந்தவர்கள். இதனைத்தான்



தங்கள் ஆபரணமாகக் கொண்டுள்ளார்கள். இந்த மக்காமில் உனக்கு எண்ணத் தொலையாத எண்ணங்களும் சந்தேகங்களும் தோன்றும், இந்த இஸ்மு நெருப்பு. அவற்றை இது கரித்து விடும். ஆதலால், அதிகமாக திக்ரு செய். மனதில் தோன்றும் சந்தேகங்களையும் எண்ணங்களையும் பொருட் படுத்தாதே. இவ்வாறானவற்றை விட்டு நீ அதி விரைவில் விடுபடமுடியாது. ஏனெனில், உனது இருதயக் கண்ணாடி சிருஷ்டிகளை நோக்கி இருக்கிறது. முகக் கண்ணாடி எதற்கு எதிரில் இருக்கிறதோ அதன் பிரதி பிம்பம்தான் அக்கண்ணாடியில் தெரியும் அல்லவா? எனவே, இறைவனை அடைய வேண்டும் என்ற மெய்யான விருப்பம் உனக்கிருந்தால், நீ சிருஷ்டிகளை முற்றிலும் புறக்கணித்து விட வேண்டும். உன் குடும்பத்தினர், நண்பர்கள் முதலிய யாவரையும் ஒன்றித்து முற்றிலும் மறந்து உனது றப்பிடம் லகித்து விட வேண்டும். அவன்தான் الفتاح **அல்பத்தாஹ்** (வெற்றியளிப்பவன்) அல்அலீம் (மிக அறிந்தவன்). இந்த மக்காம்தான் முகர்ரபுகளுக்கு முதல் மக்காம்.

## மூன்றாம் மக்காம்

இது நஃப்ஸுல் முல்ஹிமாவுக்குரியது. இதன் ஸைர் (நடை) அல்லாஹு தஆலாவின் பாலில்தான். அதாவது இந்த மக்காமில் உள்ளவரின் **அகத்தில்** ஈமானின் ஹக்கீக்கத்து அதாவது விசுவாசத்தின் அகமியம் வெளியாகுவதாலும், அவருடைய ஷுஹூதில் அல்லாஹுதஆலாவைத் தவிரவுள்ள அனைத்தும் அழிந்து விடுவதாலும் அவரது பார்வை அல்லாஹுத் தஆலாவின் மீதல்லாமல் வேறு எதிலும் விழாது. இதன் ஆலம் (உலகம்) عالم الارواح **ஆலமுல் அர்வாஹ்** (ஆன்ம உலகம்). இதன் மஹல்லு (இடம்) ஆன்மா. அதன் ஹால்

(நிலை) அல்இஷ்கு என்னும் பேரின்பக் காதல். அதன் வாரிது (வருகை) المعرفة **அல்மஅரிஃபத்து** என்னும் ஞானம். இதன் ஸிஃபத்து (தன்மை) தர்மம், இருப்பதைக் கொண்டு திருப்தியடைதல் கல்வி, பணிவு, பொறுமை, சாந்தம், கஷ்டத்தைச் சகித்துக் கொள்ளல், மக்களை மன்னித்தல், அவர்களுக்கு இணக்க மானதைக் காட்டல்,அவர்கள் தங்கள் தவறுகளுக்குக் கூறும் காரணங்களை ஏற்றுக் கொள்ளல், யாவற்றின் நெற்றி ரோமங் களையும் அல்லாஹு தஆலா பிடித்து கொண்டிருக்கிறான் என்ற உண்மையை பிரத்தியட்சமாகக் கண்டு கொள்ளல் ஆகியவை களாகும். சிருஷ்டிப் பொருள்களில் எதையும் கண்டிக்கவோ ஆட்சேபிக்கவோ மாட்டார். அழகிய சங்கீதத்திலும் சாரீரத்திலும் (இனிய குரலிலும்) பிரியமும், அதனைச் செவியேற்பதில் இன்பமும் அவருக்கு இருக்கும். திக்ரு செய்வதில் அதிக நாட்டம் கொள்வார். மலர்ந்த முகத்துடன் இருப்பார். அல்லாஹு தஆலாவைப் பற்றி எப்பொழுது திருப்தியுடனிருப்பார். கல்வி ஞானம், முஷாஹதா ஆகியவற்றைப் பற்றிப் பேசுவார். இந்த மக்காமில் இருப்பவருக்கு அவரின் கெடுதல்களையும் நன்மைகளையும் இறைவன் அறிவிப்பான். ஆதலால், இந்த நஃப்ஸுக்கு **அன்னஃப்ஸுல் முல்ஹிமா** என்ற பெயர் வந்தது.

ஆசானின் உதவி இல்லாமல் இந்த மக்காமிலிருந்து விடுபட முடியாது. சந்தேகங்கள் என்ற இருள்களிலிருந்து விடுபட்டு, தஜல்லியாத் என்ற வெளிச்சத்தில் வருவதற்கு ஆசானின் ஆதரவு மிகத் தேவை. இந்த மக்காமில் இருப்பவர் மிகப் பலஹீனமான நிலையுள்ளவராக இருப்பார். ஜமால் எது? ஜலால் எது? என்ற வித்தியாசம் அவருக்குத் தெரியாது. மலக்கின் மூலமாக வரும் உதிப்பு இன்னது, ஷைத்தானின் மூலமாக வரும்



உதிப்பு இன்னது என்பதைப் பிரித்தறிந்து கொள்ள மாட்டார். ஏனெனில், அவர் இன்னமும் பிறவித் தன்மைகளை விட்டு முற்றிலும் விடுபடவுமில்லை. பஷரிய்யத் என்னும் மனித உடலுக்குத் தேவையானவைகள் யாவும் அவரை விட்டு அகன்றிடவுமில்லை. அவர் தன்னைப் பற்றிக் கொஞ்சம் மறந்திருந்தாலும் கீழானவரிலும் கீழானவராக பாதாளத்தில் தள்ளப்பட்டு விடக்கூடும். அதாவது நஃப்ஸுல் அம்மாராவின் நிலைக்கு பழையபடி அவர் திரும்பி விடக்கூடும். அதிகமாகச் சாப்பிடல், அதிகமாகப் பருகல், அதிகமாகத் தூங்குதல், மக்களுடன் அதிகமாக உறவாடல் போன்றவை களெல்லாம் உண்டாகி விடலாம். ஒருவேளை அவரது கொள்கை கூட தவறி விடலாம். இறைவனை வணங்குவதை விட்டு விட்டு பாவச் செயல்களில் ஈடுபட்டு விடவும் கூடும். இந்நிலையில் அவர் தன்னைக் குறித்து பக்கா முவஹ்ஹிது அதாவது சரியான ஏக தெய்வக் கொள்கைக்காரர் என்றும், பொருட்களின் அகமியங்கள் தனக்கு வெளியாகுவதாகவும் எண்ணிக் கொண்டிருப்பார். தன்னை முஹக்கிகாக (ஆராய்ச்சியாளராக) கருதுவார். திக்ரு, வணக்கம் ஆகியவற்றில் ஈடுபட்டிருப்பவர்கள் ஷுஹூதை விட்டு திரையிடப் பட்டிருப்பதாகவும் எண்ணுவார். எனவே, அவரது நம்பிக்கை விசுவாசம் மேற்கண்டவாறு கெட்டுப் போனால் அவர் நாசமடைந்து விட்டார். அழிந்தவர்களுடன் இவரும் சேர்ந்திடுவார். அவரது முயற்சிகள் யாவும் தொலைந்து போகும். அவர் வெற்றியடைய வில்லை. ஷைத்தானால் அவருக்கு தோற்றுவிக்கப்படும் எண்ணாங் களெல்லாம் (இறைவனால் தோற்றுவிக்கப்படும் ஞானத் தோற்றங்கள்) என்று எண்ணிக் கொள்வார். ஆதலின், மெஞ்ஞானப் பாடையில் செல்லும் சகோதரரே!. நீ ஆசானை முற்றிலும் பின்பற்றி நடப்பது மிக அவசியமாகும். அவரைப் பார்க்கினும் மேலானவன் என்றும், நீதான் பூரணமான முவஹ்ஹிது; அவர் மஹ்ஜூபாக

அதாவது திரையிடப்பட்டவராக இருக்கிறார் என்றுங் கூட உனக்குத் தோன்றும். அப்படித் தோன்றிய போதினும் அவரை விட்டு நீ விலகக் கூடாது. அதே சமயத்தில் ஷரீஅத்தைப் பேணி நடப்பதையோ, மரியாதையைக் கடைப் பிடிப்பதையோ, விர்துகள் ஓதுவதையோ கைவிடக் கூடாது.

இந்த மக்காமில் இருக்கும் போது தரீக்கத்தின் வரம்புகளுக்கு உட்பட்டிருக்க வேண்டும். ஏனெனில், இந்த மக்களிலுள்ள உனது நஃப்ஸு வரையறைக்கு உட்படாமல் இருக்கவும் எதையும் பொருட்படுத்தாமல் இருக்கவுமே தூண்டும். ஆதலின், மன நிம்மதி ஏற்படும் வரை, இருதய சாந்தி, அமைதி ஏற்படும் வரை அதற்கு மாறாக நடந்து கொள்வதுதான் முக்கியமான வேலை. நீ நான்காவது மக்காமுக்கு வந்தால்தான் இந்த நிலை ஏற்படும். அதில்தான் இரு உலகப் பேறுகளும் இருக்கின்றன.

தவிர, ஸாலிக்கானவர் இந்த நான்காவது மக்காமில் கால் வைத்தவுடனேயே இறைவனின் உதவியால் நஃப்ஸின் ஆபத்துகளை விட்டு விடுதலையடைந்து விடுகிறார். இதுதான் கமால் என்னும் பரிபூரணத்துவத்தின் படிகளில் ஏறுவதற்கு முதற்படியாக இருக்கிறது. ஸாலிக்கானவருக்கு இங்கு القرب **அல்குர்பு** அதாவது இறைவன் சமூகத்தை நெருங்குவதற்குரிய தென்றல்கள் கிடைக்கும். பதட்டத்தை விட்டு அமைதியில் திரும்பி விடுவார். ஊசலாடிக் கொண்டிருக்கும் நிலை மாறி, உறுதியான நிலை வந்து விடும். ஸாலிக்குகளில் ஒரு சிலரைத் தவிர்த்து பெரும்பாலானவர்கள் தங்களை வழி நடத்திச் செல்லும் ஞானகுரு தங்களுடன் இருக்க வேண்டும் என்று அவசியப்பட மாட்டார்கள்.



நஃப்ஸுடைய கோளாறுகளை விட்டு விடு. உனக்கு வெளியாகும் தவ்ஹீதைக் கொண்டு ஏமாந்து விடாதே. ஏனெனில், இவ்வாறு ஏமாந்து விடுவதும் நஃப்ஸின் கோளாறுகளுக்கு மதிப்புக் கொடுப்பதும் உன்னைப் பழையபடி திருப்பி விடக் கூடும். உனது உன்னதமான கோரிக்கையை நீ அடையாதவாறு உன்னை அவை துண்டித்து விடவுங் கூடும். இன்னமும் நீ பிரகாசத்திலான பல திரைகளை அதாவது **ஹிஜாபுன்னூரானிய்யாவை** அவ்வல்லோனின் உதவியால் அகற்றிக் கொண்டு செல்ல வேண்டியதிருக்கிறது. ஆதலின், ஹல்றத்துல் அஹதிய்யா அதாவது இறைவனின் ஏகத்துவ நிலையை மட்டும் நீ தேடு. உனது ஞான குருவாகிய ஆசிரியரின் முந்தாணியை பற்றிப் பிடித்துக் கொள். உணவு, தூக்கம், மக்களுடன் கலந்துறவாடல் ஆகியவற்றைக் குறைத்துக் கொள்வதில் இனியும் நீ கவனமாக இருக்க வேண்டும். உனக்கு ஏற்படும் தொந்தரவுகளைச் சகித்துக் கொள். இந்த மூன்றாவது மக்காம். நன்மை தீமை இரண்டும் கலந்த மக்காம். இதில்தான் மனிதர்கள் சருகி விடுவர். ஆதலால், மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இந்த மக்காமிலுள்ள நஃப்ஸுல் முல்ஹிமாவின் நன்மைகள் அதன் தீமைகளை மிகைத்திடுமாயின் உன்னதமான நிலைகளில் நீ ஏறி விட்டதாகக் கொள்ள வேண்டும். ஆனால், அதன் தீமைகள் அதன் நன்மைகளை மிகைத்து விட்டால் நீ கீழில் இறங்கி விட்டதாகக் கொள்ள வேண்டும். இப்படிப் பட்ட சந்தர்ப்பத்தில் உன் நஃப்ஸுக்கு கஷ்டங் கொடுக்க வேண்டும். அதனைப் பழிக்க வேண்டும். இந்த நஃப்ஸின் தீமைகளை அதன் நன்மைகள் மிகைத்து விட்டன என்பதற்குரிய அடையாளங்கள் வருமாறு.

உனது அகம் حقيقة الايمانية ஹக்கீக்கத்தே ஈமானிய்யா அதாவது விசுவாசத்தின் தத்துவத்தால் நிறம்பி இருப்பதாக நீ காண்பாய். எவ்வாறெனில், இவ்வுலகத்தில் இருக்கிற யாவும் அல்லாஹு தஆலாவின் நாட்டப்படி, அவன் ஏற்படுத்திய அளவுப்படி நடைபெறுகின்றன என்று நீ உறுதியாக நம்புவாய். பெரும் பாவம் சிறு பாவங்களை விட்டு அதிக முயற்சியுடன் நீ விலகி இருப்பதுடன் வணக்கங்களும் வழிபாடுகளும் நிறம்பிய வனாகவும் உனது புறம் இருந்து வரும்.

நன்மைகளைத் தீமைகள் மிகைத்து விட்டன என்பதற்கு அடையாளம் வருமாறு:- வழிபாடுகளையும் வணக்கங்களையும் நீ செய்ய மாட்டாய். உனது புறம் ஷரீஅத்திற்கு முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பதாக இருக்க மாட்டாது. மேலே கூறப்பட்ட விபரத்துக்கு நேர் மாறாக இருந்து வரும்.

**அறிந்துகொள்:-** அல்லாஹு தஆலாவின் திருப்தியும், அவனது தஜல்லியாத்துகளும் வழிபாடு என்ற வாசல் வழியாக இல்லாமல் வேறு விதமாக அடியானுக்கு வராது. அவனது கோபம், சாபம், விலகி இருத்தல் ஆகியவைகள் பாவம் என்ற வாசல் வழியாக இல்லாமல் வேறு வகையாக அடியானுக்கு வராது. அவன் தனது கோபத்தை பாவச் செய்கைகளுக்குள்ளும், தனது திருப்தியை வழிபாடுகளுக்குள்ளும் மறைத்து வைத்திருக் கிறான். ஆதலின், ஷரீஅத்தின் தலைவாசலில் அதற்குரிய ஒழுக்கத்துடன் நின்று கொள். அதினும், மிகத்தாழ்ந்தவன் கேவலமான நிலையிலுள்ளவன் பணிவாக நிற்பது போல நின்று, உனது எஜமானனிடம் கேள். உனது கோரிக்கை நிறைவேற அவன் உதவியயை இம்மூன்றாவது மக்காமுக்குரிய திக்ரின் மூலம் நாடு.



இந்த மக்காமில் கூற வேண்டிய வேண்டிய திக்ரு (ஜபம்) هو هو ஹு ஹு என்பது. இது இன்ஷா அல்லாஹ் திருசியப் (காணப்படும்) பொருள் அனைத்திலும் அவனது ஹுவிய்யத்து நிறம்பி இருப்பது உனக்கு வெளியாகும். இந்த திக்ரை முதலில் ஆரம்பிக்கும் போது விழிச் சொல்லைச் சேர்த்து ياهو யா ஹு என்று ஆரம்பிக்க வேண்டும். அப்புறம் விழிச் சொல்லை விட்டு விட்டு ஹு என்று மட்டும்தான் சொல்ல வேண்டும். அதாவது யாஹு ஹு ஹு ஹு என்று இப்படியாக ஹு என்று நின்றும், உட்கார்ந்தும், படுத்தும் இரவு பகல் எந்நேரமும் கூறிக் கொண்டிருக்க வேண்டும். இவ்விதமாகச் செய்வதால் இந்த மக்காமிலுள்ள அபாயங் களிலிருந்து இந்த திக்ரின் பரக்கத்தால் நீ தப்பித்துக் கொள்ளலாம். இதன் மூலமாகவே முதல் இரண்டு மக்காம் களிலும் நஃப்ஸுடன் சேர்ந்து எஞ்சி இருக்கிற அற்ப சொற்ப சம்பந்தங்களும் அறுபடும். ஏனெனில், இந்த மக்காமி லுள்ள நஃப்ஸு தனக்கு முன்னாலுள்ள மற்றிரு வகையான நஃப்ஸு களுடன் திரும்பிக் கொண்டே இருக்கும். உனது எச்சரிக்கையை இந்த நஃப்ஸு எதிர்பார்த்துக் கொண்டே இருக்கும். அதனைக் கண்டிக்கும் விஷயத்திலும் ஒடுக்கும் விஷயத்திலும் நீ சற்று அலட்சியமாக இருந்தால், உனது பழைய நண்பர்களுடன் நீ திரும்பச் சேரவும், உனக்குப் பிரியமானவர் களைச் சந்திக்கவும், உனது மஃஷுக்கு (பிரியமானவர்)களுடன் இன்புறவும் உனக்கு ஆர்வமும் ஆசையும் ஷௌக்கும் உண்டாகி விடும். ஆதலின், இவற்றைப் பேணி அதற்குத் தக்கவாறு நடந்து கொள்ள வேண்டும். இவ்விதம் நடந்து கொள்வதுதான் ஸாலிக்கான வருக்கும் அவருடைய ஞானவழி நடையில் பலத்தையும் ஊக்கத்தையும் ஏற்படுத்தும்.

தன்னுடைய நஃப்ஸு பழையபடி பின் சென்றிருப்பதாக ஸாலிக்கானவர் உணர்ந்தால் அவர் மேற் சொன்ன விதமாக நடந்து கொண்டால்தான் தன் நிலையை மறுபடியும் அடைய முடியும், இந்த மக்காமுக்கு வந்தவர் மக்கள் தன்னை விரும்பாதிருப்பதற்கும், தன்னை லட்சியம் செய்யாதிருப்பதற்கும், தன்னை நினையாதிருப்பதற்கும் தகுந்த நடவடிக்கையை எடுத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், முகஸ்துதியை உதறித் தள்ளுவதையும் கண்ணியத்தை துறப்பதையுந்தான் உண்மையான ஆஷிக்கு இன்பமாகக் கொள்வார். இவற்றின் மூலம்தான் மெய்யான ஆஷீக் இன்னார் பொய்யான ஆஷிக் இன்னார் என்பதை அறிய முடியும்.

ولو عز فيها الذل ما لذ للهوى
ولو لا الحب في الذل عزة

அதிலே பழிப்புக்கு முகஸ்துதி இருக்குமாயின் அவாவுக்கு இன்பமுமில்லை. பழிப்பில் நேசத்தைத் தவிர முகஸ்துதியும் இல்லை. ஆதலின், உனது கண்ணியத்தை, மதிப்பை முகஸ்துதியை களைந்தெறிந்து விடு. பழிப்புக்கும் அவமரியாதைக்கும் பயப்படாதே. இந்த மக்காமில் இவற்றை கழற்றி எறிவது உனக்கு கஷ்டமாக இருக்காது. மற்றைய மக்காம்களில் அது கஷ்டமாகத் தோன்றும். ஏனெனில், இந்த மக்காம்தான் العشق இஷ்கு (பேரின்பக் காதல்) உடைய மக்காம். இஷ்க் என்னும் பேரின்பக் காதல் உள்ளவர் அதனை அடைவதற்காக தன் சுய மரியாதையை இழந்து விடுவதை கஷ்டமாகக் கருதமாட்டார். முகஸ்துதியை உதறித் தள்ளுவதில் நீ பூர்த்தியடைந்து விட்டால், உன் காரியத்தை வெற்றியடைய விடாமல் தடை செய்கிற ஷைத்தானிய தன்மையுள்ள உன் நஃப்ஸு மரணித்து விடும். உனக்கு ஆத்மாக்களின் (ரூஹானிகளின்) சம்பாஷணை கிடைக்கும். அவர்கள் உனக்கு கட்டளையிடுவர், தடைவிதிப்பர், விஷயங்களைச் சொல்வர். இவற்றை நீ லட்சியம் செய்யலாகாது. இவற்றால் உனக்கு பெரும் வெற்றி கிடைத்ததாக ஏமாந்து விடலாகாது. எனவே, மனிதர் கண்ணிலிருந்து நீ விழுந்து விடுவதற்கான அதாவது மனிதர்கள் உன்னைப் புறக்கணிப் பதற்கான காரியத்தை ஷரீஅத்துக்கு உட்பட்டுச் செய்ய வேண்டும். இம்முகஸ்துதியை உதறித் தள்ளுவதால்தான் உன் மஃஷுக்கை (நீ பிரியப்பட்ட பொருளைக் நேசிக்கிற பொக்கிஷத்தை), அதாவது இறைவனை அடைய முடியும். அவனைச் சந்திப்பதற்கு இச்சுய மரியாதைகள், முட்டுக் கட்டைகளாகும்.



## எச்சரிக்கை

இந்த அஸ்மாவின் (திக்ரின்) மகிமை திக்ரே ஜலியை (பகிரங்கமாக சப்தமிட்டு திக்ருச் செய்வதைக் கொண்டல்லாமல் வெளியாகாது. அதுவும் அதற்குரிய ஒழுங்குடன் நிரந்தரமாக இடைவிடாமல் வரிசையாக செய்ய வேண்டும். அவ்வொழுங்குகள் வருமாறு:-

கிப்லாவை முன்னோக்கி இருக்க வேண்டும். முடியுமானால் மண்டியிட்டு முட்டுக்காலின் மீது அமர்ந்து திக்ருச் செய்ய வேண்டும். அல்லது நின்ற வண்ணம் கண்ணை மூடிக் கொண்டு திக்ருச் செய்யலாம். உனது இருதயம் வேறு சிந்தனையில்லாமல் காலியாக இருக்க வேண்டும். நீ உச்சரிக்கும் திக்ரின் மீதே உனது செவி கவனமாக இருக்க வேண்டும். அகம்

புறம் ஆகிய இரண்டும் சுத்தமாக இருக்க வேண்டும். அதாவது ஒலுவுடன் உடை உடல் இடம் ஆகியவைகளும் சுத்தமாக இருக்க வேண்டும். ஷரீஅத்தை முற்றிலும் கடைப்பிடித்து மேற்கண்ட ஒழுங்குகளைப் பின்பற்றி நீ திக்ரு செய்து வந்தால், உனக்கு வெற்றி நெருங்கி வந்து விட்டது என்பதை நிச்சயமாக நம்பு. இவ்வெற்றி உனக்குத் தாமதமானால் அதற்காக நீ ஓலமிடவோ மனம் சோரவோ வேண்டியதில்லை. அவ்வெற்றி உனக்குக் கிடைப்பது உறுதி. என்றாலும், ஷரீஅத்தையும் தரீக்கத்தையும் முற்றிலும் கடைப்பிடித்து நிலையாக இருக்க வேண்டியது ஷர்த்து.

சில சமயங்களில் لاهوياهو **லாஹூ யாஹூ** என்றும் திக்ரு செய்து கொள். இது ஒரு மகத்தான திக்ரு. இதனை திக்ரு செய்யும் போது உன் அங்கங்களுடன் நீ பேசுவது போலிருக்க வேண்டும். இந்த உஜூதில் அதாவது உலகத்தில் அல்லாஹு தஆலாவின் ஹுவிய்யத்தைத் தவிர வேறில்லை. அல்லாஹு தஆலாவை தவிரவுள்ள யாவும் அவனது ஸிஃபாத்து என்னும் தன்மைகளுக்கும், அஃப்ஆல் என்னும் திருவிளையாடல் களுக்கும் அடையாளங்களாகும் என்று உன் அங்கங்களுக்கு நீ கூறுவது போலிருக்க வேண்டும். இந்த மஷ்ஹது (பார்வை) காமில் என்னும் பரிபூரணமானவர்களது மஷ்ஹது ஆகும்.

## நான்காவது மக்காம்

இந்த மக்காமிலிருப்பது நஃப்ஸுல் முத்ம இன்னா. இதன் ஸைர் அல்லாஹ்வுடனிருக்கிறது. இதன் ஆலம் الحقيقة المحمدية **ஹக்கீக்கத்தே முஹம்மதிய்யா** (முஹம்மதைச் சேர்ந்த அகமியம்) அதன் மஹல் (இடம்) நெஞ்சு. அதன் நிலை மெய்யான அமைதி, ஒடுங்குதல். அதன் வாரிது ஷரீஅத்தின் சில இரகசியங்கள். அதன்



தன்மை உள்ளமை, தவக்குல் என்னும் பொறுப்பை ஒப்புக் கொடுத்தல், சாந்தம், வணக்கம், நன்றி செலுத்தல், கற்பனையைப் பொருந்திக் கொள்ளல், கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளல் ஆகியவைகளாகும்.

இந்த மக்காமிலே இதற்கு அடையாளம் ஷரீஅத்தின் சட்டத்துக்குக் கீழ்ப்படியும் விஷயத்தில் ஒரு சாண் கூட விலகிச் செல்ல மாட்டாய். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது குணங்களையும் தன்மைகளையும் உன்னிலே உண்டாக்கிக் கொள்வதில்தான் உனக்கு இன்பம் தோன்றும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சொற்களை முற்றிலும் தழுவி நடப்பதில்தான் உனக்கு நிம்மதி இருக்கும். ஏனெனில், இது தம்கீனுடைய மக்காம் அதாவது நிலையானது.

இந்த மக்காமிலே ஸாலிக்குக்கு அவரைச் சந்திப்பவர் களின் கண்கள் இன்பம் நுகருவதாகத் தெரியும். அவர் பேச்சைக் கேட்கும் செவிகள் இன்புறும். அவர் காலமெல்லாம் பேசிக் கொண்டிருந்தாலும் அவரது பேச்சில் சோர்வு இருக்காது. ஏனெனில், அவரது நா அவரது இருதயத்தில் இறைவன் போடுகிற ஞான அதிசயங்களின் தத்துவங்களையும், ஷரீஅத்தின் இரகசியங்களையும் அறிவிக்கும் கருவியாகத்தான் இருக்கும்.

அல்லாஹு தஆலாவும் அவனது ரசூலும் கூறியதற்கு இயைந்த வார்த்தைகளைத் தவிர வேறு எதையும் அவர் கூறவே மாட்டார். இதற்காக எந்த நூலையும் படிக்க மாட்டார். எவரிடமும் கேட்டுத் தெரிந்து கொள்ளவு மாட்டார். இறைவன் தன் இருதயத்தில் போட்டதை தன் சுய முயற்சியின்றி அவர் அறிந்து கொண்டிருப்பதையே பிறரிடம் கூறுவார். அவருக்கு அல்லாஹு தஆலா ஒருவிதமான கண்ணியத்தை ஏற்படுத்தி விடுகிறான்.

இதனால், மக்களின் கண்ணுக்கு அவர் பெரிதாகத் தோன்றுவார். அவர்களால் மதிக்கப்படுவார்.

இந் நிலையை அடைந்த ஸாலிக்கு சில சமயங்களில் மக்களுடன் சேர்ந்திருந்து, இறைவன் தனக்களித்த ஞானங் களைச் சொல்லி அவர்களைத் திருத்துவது அவசியமாகும். தெய்வீக ஞான நுணுக்கங்களையும் விபரிக்க வேண்டும்.

இன்னும் அவருக்கு இறைவனுடனும் ஒரு நேரம் இருக்க வேண்டும். இந்த மக்காமில் ஸாலிக்கானவர் கமாலுடைய (பரிபூரணத்துடைய) தாழ்ந்த அந்தஸ்திலிருக்கிறார். ஆதலால், தன்னுடைய முழு அவகாசத்தையும் மக்களுடன் சேர்ந்திருப் பதிலேயே கழிக்கக் கூடாது. சில குறிப்பிட்ட நேரங்களில் அவர்களுடன் சேர்ந்திருக்க வேண்டும். சில சமயம் அவர்களை விட்டு விலகி இறைவனின் தியானத்திலும் இருக்க வேண்டும். இல்லையேல், எஞ்சியுள்ள ஐந்து ஆறு ஏழாவது மக்காம்களில் அவர் முன்னேறுவதில் தடையேற்படும். ஆகவே, இந்த மக்காமில் இருப்பவருக்கு தனித்திருப்பது இன்பமாகத் தோன்றினால், தனித்திருக்க வேண்டும். மற்றவருடன் சேர்ந்திருப்பது இன்பமாகத் தோன்றினால், சேர்ந்திருக்க வேண்டும்.

இந்த மக்காமுக்குள்ள திக்ரு حق حق **ஹக் ஹக்** என்பது இதனை விழிவேற்றுமையுருபுடன் சேர்த்து ياحق ياحق **யாஹக் யாஹக்** என்றுங் கூறலாம். அவ்வாறு சேர்க்காமல் வெறுமனே ஹக் ஹக் என்றுங் கூறலாம். இந்த மக்காமில் உனக்கு சில அற்புதங்கள் நிகழலாம், அவ்வாறு நிகழுமாயின் அதனை நீ கவனிக்கக் கூடாது. உனது சிந்தை அதில் செல்லக் கூடாது. உனது அலுவலை விட்டு உன்னைப் பிரித்து வைக்கக்



கூடியவைகள் உனக்கு வெளியாகக் கூடாது என்று இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். காமிலான பெரியோர்கள் தங்களால் நிகழும் அற்புத நிகழ்ச்சிகளைக் குறித்துக் கொஞ்சங் கூட லட்சியம் செய்யாதிருப்பது இதனால்தான். தங்களுக்கு அற்புத நிகழ்ச்சி வெளியாயிற்றா அல்லவா என்பதைக் கூட அவர்கள் அறிய மாட்டார்கள். அதனை அவர்கள் அடியுடன் விட்டு விடுவார்கள்.

كل شيئ ما خلا الله باطل

وكل نعيم لا محالة زائل

அல்லாஹ்வைத் தவிரவுள்ள எல்லா பொருட்களும் தள்ளத் தக்கதே. திட்டமாக சகல பாக்கியமும் நீங்கிப் போகக் கூடியதே என்று பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

الكرامة **அல் கராமத்துகள்** (அற்புதச் செய்கைகள்) வெறுக்கத் தக்கவனல்ல. அவை தன் அடியானை கண்ணியப் படுத்த இறைவன் அளிக்கும் சன்மானங்களாகும். ஆதலால், அவை ஏற்றுக் கொள்ளத் தக்கனவே. என்றாலும், அவை தனக்கு நிகழ வேண்டும் என விரும்புவதும், அவற்றில் சார்வதும் கூடாது. இப்படிச் செய்வது பழிக்கத் தக்கதும் இறைவனது அல் குர்பு என்னும் முடுகுதலை (நெருங்குவதை சமீபித்தலை) துண்டித்து விடுவதுமாக இருக்கிறது.

இறைவனுக்கு العبودية **அல்உபூதியத்** (அடிமைத் தனம்) செய்யாமல் அவனது القربة **கர்பத்தை** (நெருங்குவதை) அடைய முடியாது. ரூபிய்யத் (பரிபக்குவப் படுத்துதல்) என்பதின் இரகசியங்களும் இந்த உபூதியத்தில் மறைக்கப்பட்டிருக்கிறது.

ஆதலின், கராமத்தை நேசிப்பவர் உபூதிய்யத்தை விட்டு வெளியேறி மற்றவர்களைப் பார்க்கினும் மேம்பட முயல் பவராகவே கருதப்படுவார். ஆதலால், கராமத்தை விரும்புவது கூடாது.

**அறிந்துகொள்:-** இந்த மக்காமிலுள்ள ஸாலிக் அவ்ராதுகள், துஆக்கள் ஓதுவதைப் பிரியங் கொள்வார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது ஹல்றத்தை இதற்கு முன்னரிருந்ததைப் பார்க்கினும் அதிகமாக நேசிப்பார். என்றாலும், இந்த மக்காமிலுள்ள நீ உன் நஃப்ஸைக் குறித்து அச்சந் தீர்ந்திருக்கக் கூடாது. விரோதமே குடி கொண்டுள்ள ஒரு பகைவனைப் பற்றி அச்சமற்றிருக்கக் கூடாதல்லவா? அவன் நண்பனாகத் தோன்றிய போதினும் சரியே. தவிர, மனிதன் கஷ்டங்களையும் சங்கடங்களையும் அனுபவிக்க வேண்டிய வனாகவே இருந்து வருகிறான். இந்த மக்காமில் அவனுக்கு பணத்தின் மீது ஆசையுண்டாகும். ஆனால், சன்மார்க்கக் காரியங்களுக்கும் கஷ்டப்படும் இதர சகோதரர்களுக்கும் பணம் இருந்தால் உதவி செய்யலாம் அல்லவா? என்ற அடிப்படையில் அப்பணத்தாசை ஏற்படுவது குற்றமுமல்ல தவறுமல்ல. ஆனால், அதனை அடைவதற்காக தன்னுடைய இருதயத்தை இறைவனை விட்டு வேறு பக்கம் திருப்பவே மாட்டார்.

அவரது நோக்கப்படி அவருக்குப் பணம் கிடைத்தால் அதனை அவர் பிறருக்கு மறைக்க மாட்டார். அல்லாஹுத் தஆலா தனக்குத் தந்த பாக்கியத்தை வெளிப்படுத்துவார். பிறருக்குச் சொல்லிக் காண்பிப்பார். இன்னும் தன்னைப் பொறுத்த மட்டில் அந்தப் பணம் தேவை இல்லை என்பதையும் அதனைத் தேடிக் கொள்வதில் தனக்கு எவ்விதமான சுய சக்தி இல்லை என்பதையும் வெளிக்குக் காட்டிக் கொள்வார்.



இந்த மக்காமிலுள்ளவருக்கு அதிகாரத்திலும் ஆசை யுண்டாகலாம். தான் பெரிய ஷெய்காக இருக்க வேண்டும், தன்னிடத்தில் மக்கள் வந்து திரள வேண்டும், அவர்களுக்கு உப தேசங்கள் புரிய வேண்டும் என்ற எண்ணம் அவரது உள்ளத்தில் தோன்றும். அதனை அவர் ஏறெடுத்துப் பார்க்கவும் கூடாது. அது மனப்பிராந்தி. அதனைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும். ஆனால், எவ்வித முயற்சியும் இல்லாமல் இவ்வம்சங்கள் தானாக வந்து சேர்ந்தால் அது இறைவனால் அளிக்கப்படுவதாகும். இந்நிலையில் இது குற்றமல்ல. இதனை வேண்டாம் என்று தள்ளக் கூடாது.

இறைவனால் இது அளிக்கப்படுகிறது என்பதற்கு அடையாளம் அவரது சகோதரர்கள் அவரை மிக நேசிப்பர். அவருக்கு அவர்கள் கீழ்ப்படிந்து நடப்பர். இந்நிலையில் அவரும் மற்றவர்களைப் பார்க்கினும் தனக்கு விசேஷமான அந்தஸ்திருப் பதாகக் கருத மாட்டார். ஆனால், அவர் தங்களைப் பார்க்கினும் சிறந்தவர் என்று மற்றவர்கள் கருதுவர்.

ஸாலிக்கானவர் நான்காவது மக்காமுக்கு வந்து அவரது நஃப்ஸு முத்ம இன்னாவாக ஏற்பட்டு விட்டாலும், அவர் الإرشاد **இர்ஷாதுக்கு** அதாவது பிறருக்கு வழிகாட்டுவதற்கு தகுந்தவராக மாட்டார். ஏனெனில், வழிகாட்டியாக வருவதற்கு இருக்க வேண்டிய ஷர்த்துகள் (தன்மைகள்) இன்னமும் அவரில் பூரணமாக அமைந்து விட வில்லை. ஆதலால், தன்னைப் பார்க்கினும் சிறந்தவரும், ஸுலூக்கில் காமிலான அதாவது ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது மக்காம்களில் இருப்பவர்களும் இருக்கும் போது அவர் இர்ஷாதுக்கு முந்தக் கூடாது.

## முக்கிய கவனிப்பு

சிலர் நஃப்ஸை மூன்று விதமாகப் பிரித்திருக்கின்றனர். ஆதலின், நஃப்ஸின் தரத்தை நிர்ணயிப்பதில் மெய்ஞானிகளுக்குள் கருத்து ஒற்றுமை இல்லை என்று கருதக்கூடும். வெளித் தோற்றத்தில் கருத்து ஒற்றுமை இல்லாமல் றோன்றலாம். ஆனால், அந்தரங்கத்தில் எல்லோரும் ஒரே விதமான கருத்தையே கொண்டிருக்கின்றனர்.

இந்நூலில் கூறப்பட்டுள்ளவாறு நஃப்ஸு ஏழு வகை என்று கூறுபவர்கள் கல்வத்திலிருப்பவர்கள்தான். கல்வத்தில் இல்லாமல் மற்றவர்களுடன் கலந்து உறவாடிக் கொண்டு ஏனைய மக்களைப் போல் இருந்து வருபவர்கள் இதனை மூன்று வகையாகப் பிரித்திருக்கின்றனர். இவ்வர்க்கத்தினர் இந்நூலில் கூறப்பட்ட இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று மக்காம்களைத்தான் கூறி இருக்கிறார்கள் . ஆகவே, இந்நூலில் கூறப்பட்ட முதல் இரண்டு மக்காம்களும் இவர்களிடத்தில் முதல் மக்காமாகவும், இந்நூலில் கூறப்பட்ட நான்கு, ஐந்து, ஆறு, ஏழாவது மக்காம் ஆகிய நான்கு மூன்றாவது மக்காமாகவும் இவர்கள் பிரித்து முதல் மக்காமுக்கு லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற திக்ரையும், இரண்டாவது மக்காமுக்கு அல்லாஹ் அல்லாஹ் எனற திக்ரையும், மூன்றாவது மக்காமுக்கு ஹூ ஹூ என்ற திக்ரையும் ஏற்படுத்தி இருக்கின்றனர். இம்மூன்றுக்கும் முறையே **நஃப்சுல் அம்மாரா, நஃப்சுல் ல்வாமா, நப்சுல் காமிலா** என்று பெயரிட்டிருக்கின்றனர். கல்வத்துக்காரர்கள் கூறுகிற நான்காவது மக்காமில் இருக்கிற நஃப்சுல் முத்மஇன்னா கமாலிய்யத்தை அதாவது பரிபூரணத் தன்மையை அடைந்து விட்டது. அது பிறருக்கு நேர்வழி காட்டலாம். ஆனால்,



கமாலிய்யத்தை அடைந்த நஃப்ஸு இருள்களுக்குள்ளிருந்து வெளிச்சத்தில் வந்து விட்டாலும், இதிலும் பாகுபாடுகள் அதாவது இந்தப் பதவிக்கு வந்த நஃப்ஸுகள் ஒன்றுக் கொன்று வித்தியாசப்பட்டிருக்கின்றன என்பதை அவர்கள் மறுக்கவில்லை. கல்வத்துக்காரர்கள் இந்த வித்தியாசத்தை நான்காகப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் தனித்தனிப் பெயர்களை ஏற்படுத்தி, அதற்கான திக்ருகளையும் நிர்ணயித்துள்ளார்கள்.

## ஐந்தாவது மக்காம்

இந்த மக்காமில் இருப்பது **நஃப்ஸுர் ராலிய்யா.** அதன் ஸைர் அதாவது நடை அல்லாஹ்வில்தான். அதன் ஆலம் عالم اللاهوت **ஆலமுல் லாஹூத்து.** (தேவ உலகம்). அதன் மஹல்லு அதாவது இடம் அஸ்ஸிர்ரு (இகசியம்). அதன் ஹால் அதாவது நிலை الفناء **அல்பனாஉ** (அழிதல்). ஆனால், இவ்வழிவு மற்றைய ஸ்தூலங்கள் அழிந்து போவதைப் போல் அழிவதல்ல. பஷரிய்யத் அதாவது மனித ஸ்தூலத்துக்குத் தேவையான தன்மைகள் அழிந்து விடல் மட்டும்தான் இங்கு கருத்து. பக்கா என்னும் நிலையை அடைவதற்கு முன்னருள்ள நிலை இது. இந்த பனாவுக்குத்தான் حق اليقين **ஹக்குல் யக்கீன்** என்று கூறுகின்றனர்.

**குறிப்பு:-** திருமக்கா என்று ஒரு நகரம் இருப்பதாக பொய் என்று எண்ணுவதற்கு இடமில்லாதவாறு ஏராளமான மக்கள் கூறுவதைச் செவியேற்று இவ்வாறான பெயருள்ள ஒரு நகரம் இருக்கிறதென நாம் உறுதியாக நம்புவதற்கு இல்முல்யக்கீன் என்றும், அந்த நகரையும் தூரத்திலிருந்து பார்ப்பதற்கு ஐனுல் யக்கீன் என்றும் அதனுள் நுழைவதற்கு ஹக்குல் யக்கீன் என்றும்

சொல்லப்படுகிறது. திருமக்கா என்னும் நகரை இங்கு உதாரணத்துக்காகத்தான் செல்லப்பட்டது. இந்த விதமான விஷயங்களைச் சரியான முறையில் உள் வாங்குவதற்கு ஞானவான்கள் இவ்விதப் பெயர்களைக் கூறி இருக்கிறார்கள். ஆகவே அடியான் தன்னுடைய மனிதத்துவத்துக்குரிய தன்மைகள் யாவற்றையும் இறைவனின் தன்மைகளுக்குள் அழித்து கல்வியால் மட்டும் இல்லாமல், அறிவாலும், காரியத்தாலும் அவனில் ஐக்கியமாகி நிலைத்து விடுதலுக்கு இந்த இடத்தில் ஹக்குல் யக்கீன் என்று பெயர் சொல்லப்படுகிறது.

மற்றைய நஃப்ஸுகளுக்கு இருப்பது போன்ற வாரிது நஃப்சே ராலிய்யாவுக்கு இல்லை. ஏனெனில், இருக்கிற பொருளுக்குத்தான் எதாவது தேவை. இல்லாத பொருளுக்கு ஒன்றும் வேண்டாமல்லவா? இந்த நஃப்ஸு பனாவின் (அழிவின்) நிலையில் இருப்பதால் இதற்கு வாரிது தேவை இல்லை.

இந்நிலையை அனுபவத்தால் அல்லாமல் வேறு வகையில் அறிய முடியாது. ஆதலால், ஒவ்வொரு ஸாலிக்கும் தன்னுடைய நிலையைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியுமே யன்றி, பிறர் அறிந்து அந்த ஸாலிக்கிற்கு இந்நிலையை அறிவிக்க முடியாது. ஆனால், கமால் என்னும் பரிபூரண நிலையை அடைய ஆயத்தமாகிற தன் மாணவரின் இந்த நிலையை, அவருடைய ஞான ஆசிரியரான முர்ஷிதே காமில் அறிந்து கொள்ள முடியும்.

**இந்த நஃப்ஸின் ஸிஃபத்து என்னும் தன்மைகளாவன:-** அல்லாஹ்வைத் தவிரவுள்ள யாவற்றையும் துறத்தல். இக்லாஸ் என்னும் அந்தரங்க சுத்தி. நிஸ்யான் அதாவது தான் பிறருக்கு உதவி செய்ததையும், பிறர் தனக்கு தீமை செய்ததையும் மறந்து



விடல், புறத்தில் நிகழும் யாவற்றையும் மனதில் எவ்விதக் குழப்பமுமின்றி பொருந்திக் கொள்ளல், விரும்பத்தகாத எதையும் விலக்கிக் கொள்ள வேண்டும் என்ற கவலையோ, அவ்வாறான காரியம் நிகழ்வதைக் குறித்து ஆட்சேபணையோ இல்லாதிருத்தல். இந்நிலையில் இருப்பவர் இறைவனது ஜமாலை ஷுஹூது செய்வதில் (தரிசிப்பதில்) மூழ்கி இருப்பார். ஆதலால், உலகத்தில் நிகழ்கிற நன்மை தீமைகளில் அவருக்குக் கவனம் செல்வதே இல்லை. என்றாலும், அவர் பிறருக்கு இர்ஷாது என்னும் உபதேசம் செய்தல், வழிகாட்டல், மக்களுக்கு நன்மையை ஏவித் தீயதை விலக்கல் ஆகியவற்றிற்குத் தடங்கலாக இருக்காது. அவருடைய பேச்சைச் செவியேற்கும் எவரும் அப்பேச்சுக்களால் பயன்தான் அடைவார். இவ்விதமான காரியத்தை அவர் நிகழ்த்துகிற அதே சமயத்தில், அவரது இருதயம் லாஹூத்துடைய ஆலத்திலும் இரகசியத்தினும் இரகசியத்திலும் ஈடுபட்டிருக்கும்.

இந்த நிலையை அடைந்தவர் அல்லாஹு தஆலாவுடன் மிக மரியாதையாக இருந்து வருவார். அவருடைய துஆ (பிரார்த்தனை) நிராகரிக்கப்பட மாட்டாது. உண்மையில், இந்த மக்காமில் இருப்பவருக்கு அல்லாஹு தஆலாவைத் தவிரவுள்ள வேறு எதிலும் பிடிப்பு இருக்காது. ஆதலின், உன்னுடைய நஃப்ஸு அவனல்லாததில் சார்பு கொள்வதை நீ உணர்ந்தால், இந்த மக்காமில் நீ இல்லை என்பதை அறிந்து கொள். இந்த மக்காமிலுள்ள புறத்திலுள்ள யாவற்றுக்கும் அதிகாரியானவனின் அக அதிகாரத்தை அறிந்தவராக இருக்கிறார்.

இந்த மக்காமிலுள்ள நீ حَيٌّ حَيٌّ **ஹய்யுன் ஹய்யுன்** என்ற திக்ரை அதிகம் திக்ருச் செய்ய வேண்டும். இதனால் உன் பனாவின் (அழிவு) நிலை நீங்கி, பக்கா (நிலைத்தல்) என்ற நிலை

வரும், அப்பொழுது நீ ஆறாவது மக்காமுக்குள் வந்து விடுவாய். இதன் தலைவாயலில் வந்தவுடன் அஹ்பாபு அதாவது நேசர்கள் என்பவர்கள் தங்குமிடங்களுக்கு நீ மேலே ஏறுவாய் ஜீவியமுள்ளவனுடன் சேர்ந்திடுவாய், பரிபூரணத் தன்மைகள் உனக்கேற்பட்டு விடும். இதுதான். குர்புன்னவாஃபில் அதாவது நஃபிலான வணக்கங்களால் இறைவனை நெருங்குதல் என்பது.

لَايَزَالُ عَبْدِيْ يَتَقَرَّبُ اِلَيَّ بِالنَّوَافِلِ حَتّٰى
اُحِبَّهُ فَاِذَا اَحْبَبْتُهُ كُنْتُ بَصَرَهُ الَّذِيْ يُبْصِرُ
بِهٖ وَسَمْعَهُ الَّذِيْ يَسْمَعُ بِهٖ وَرِجْلَهُ الَّذِيْ
يَمْشِيْ بِهٖ وَيَدَهُ الَّذِيْ يَبْطِشُ بِهٖ،

**என் அடியான் நஃபிலான வணக்கங்களைக் கொண்டு என்னை நெருங்கிக் கொண்டே இருப்பான். இறுதியாக அவனை நான் நேசித்து விடுவேன். ஆகவே, அவனை நான் நேசித்து விட்டால் அவன் பார்க்கிற பார்வைப் புலனாகவும், அவன் செவியேற்கிற செவிப்புலனாகவும், அவன் நடக்கிற காலாகவும், அவன் பிடிக்கிற கையாகவும் நானாகி விடுவேன்** என்ற ஹதீஸ் குதுஸியில் கூறப்பட்டிருப்பதன் கருத்து இதுதான்.

**அறிந்துகொள்:-** திக்ருகளுக்குள்ளும் சில திக்ருகள் இருக்கின்றன. அவற்றிற்கு கிளைகள் என்று சொல்லப்படும். الوهّاب வஹ்ஹாபு, ஃபத்தாஹ், الواحد வாஹித், الاحد



**அஹத்.** الصمد **ஸமத்** என்னும் திக்ருகள்தான் அவைகள். இந்த ஐந்தாவது மக்காமிலுள்ள நீ **ஹய்யுன்** என்ற திக்ருடன் நீ ஃபத்தாஹ் என்பதையோ அல்லது வஹ்ஹாபு என்பதையோ சேர்த்துக் கொள். இப்படிச் சேர்ப்பதால் நீ ஆசைப்படுகிற ஆறாவது மக்காமுக்குச் செல்வது உனக்கு சுலபமாகும். அல்லாஹு தஆலா இதற்கு தவ்ஃபீக் செய்வானாக. அவனே வழியிற் சேர்க்கும் ஹாதீ.

## ஆறாவது மக்காம்

இது நஃப்சுல் மர்லிய்யாவுக்குரியது. அதன் ஸைர் அல்லாஹ்வை விட்டுமாக இருக்கும். இது நஃப்ஸுல் மர்லிய்யாவுக்கு உரியது. இதன் ஆலம் ஆலமுஷ் ஷஹாதத்து அதன் மஹல்லு (இடம்) الخفاء **அல் கிஃபாஉ** (மறைதல்) அதன் ஹால் الحيرة **அல் ஹீரத்து** (திகைப்பு). அதன் வாரிது ஷரீஅத்து, அதன் தன்மை நற்குண நல்லொழுக்கம், அல்லாஹு தஆலாவை தவிரவுள்ள யாவற்றையும் துறந்து விடல், சிருஷ்டிப் பொருள்கள்பால் அபிமானங் கொள்ளல், அவர்களது குற்றங் குறைகளை மன்னித்துக் கொண்டு அவர்களைச் சீர்திருத்த முயலல், அவர்களது பிறவித் தன்மைகள் என்னும் இருள் களிலிருந்து அவர்களை வெளியேற்றுவதற்காக அவர்களுடன் கலந்து உறவாடல் ஆகியவைகளாகும். இந்த தன்மைகள் இருப்பதால் இந்த மக்காமிலுள்ளவர் சிருஷ்டிப் பொருள்களின் பாலும் சிருஷ்டிக்கர்த்தன் பாலும் அன்பும் விசுவாசமும் உள்ளவராக இருப்பார். இத்தன்மை மிக அபூர்வமானது. இந்த மக்காமில் உள்ளவருக்குத் தவிர மற்றவருக்கு இத்தன்மை யுண்டாகுவது எளிதல்ல.

இந்த மக்காமில் உள்ள வரை மற்றவர்கள் சுலபமாகத் தெரிந்து கொள்ள முடியாது. ஏனெனில், இவர் புறத்தில் பொது மக்களுடன் நெருங்கி உறவாடி அவர்களில் ஒருவராகவே இருந்து வருவார். ஆனால், அகத்தில் ஞான இரகசியங்களின் சுரங்கமாக இருப்பார். அல்லாஹு தஆலா இவரைப் பொருந்திக் கொண்டதால், இவரின் நஃப்ஸுக்கு அந்நஃப்ஸுல் மர்லிய்யா (பொருந்திக் கொள்ளப்பட்ட நஃப்ஸு) என்ற பெயர் வந்தது.

இந்த நஃப்ஸு தனக்குத் தேவையான அறிவுகளை அல்ஹய்யுல் கய்யூமாகிய (ஜீவியமுள்ளவன், நிலையுள்ளவன்) ஆகிய அல்லாஹு தஆலாவின் சமூகத்திலிருந்து பெற்றுக் கொண்டு, சிருஷ்டிகளுக்கு நன்மை செய்ய عالم الغيب **ஆலமுல் கைபிலிருந்து** (அதாவது கண்ணுக்குப் புலப்படாத உலகிலிருந்து) திரும்பி, عالم الشهادة **ஆலமுஷ்ஷஹாதத்துக்கு** (கண்ணுக்குப் புலப்படுகிற உண்மையான உலகுக்கு) வருகிறது. ஆதலாற்றான் அதன் ஸைர் அல்லாஹு தஆலாவை விட்டும் என்று கூறப்பட்டது.

அதன் ஹால் (நிலை) அல்ஹீரத்துல் மக்பூலத்து அதாவது அங்கீகரிக்கப்பட்ட திகைப்பாகும். அதாவது "எனது றப்பே எனக்கு திகைப்பை அதிகமாக்குவாயாக" என்ற பிரார்த்தனையில் கூறப்பட்டிருக்கிற திகைப்பாகும். இந்த திகைப்பை ஞானவான்கள் வரவேற்பர். இது தங்களுக்கு சித்தியாகாதா? என்று ஏங்கி நிற்பர். இதனையல்லாமல் ஞானிகள் வெறுக்கிற திகைப்பு மற்றொன்று உண்டு. இந்தத் திகைப்புக்கு அல்ஹீரத்துல் மக்பூலத்து என்று பெயர் கூறடமாட்டார்கள். ஆகவே, இது ஸாலிக்குகளாகிய ஞானவழி நடப்பவர்கள் பழிக்கிற திகைப்பு அல்ல இது. இந்த மக்காமிலுள்ளவரின் நிலை அல்லாஹு தஆலாவுக்கு



அளித்துள்ள வாக்குறுதியை நிறைவேற்றுவதுதான். ஆதலால், அல்லாஹு தஆலாவுக்கு அவர் அளித்துள்ள வாக்குறுதிக்கு ஒருபோதும் மாறு செய்ய மாட்டார். ஒவ்வொரு காரியத்தையும் அதன் தரா தரப்படியே நிகழ்த்துவார். தக்க காரியமாக இருந்தால் அதற்காக ஏராளமாகச் சிலவு செய்வார். அப்பொழுது இவர் வீண் சிலவுக்காரர் என்று அறியாதவர்கள் கருதுவார்கள். தகாத காரியத்துக்கு கொஞ்சங் கூடக் கொடுக்க மாட்டார். அறியாதவர்கள் அவரை வடிகட்டின கஞ்சன் எனக் கருதுவர். புகழையோ இகழையோ இவர் கொஞ்சமும் லட்சியம் செய்ய மாட்டார். இவரது தன்மைகளை நன்கு ஆராய்ந்து பார்த்தால் அளவுக்கு மீறிப் போகவு மாட்டார். வேண்டிய அளவுக்குக் குறைவாக இருக்கவு மாட்டார். இரண்டுக்கும் மத்தியில் நடுத்தரமாக இருப்பார். இந்த மக்காமிலுள்ளவருக்குத்தான் இவ்வாறு நடுத்தரமாக நடந்து கொள்ள இயலும்.

இந்த மக்காமில் நீ நுழைந்தால் முதலாவதாக உனக்கு அல்கிலாஃபத்துல் குப்ரா என்னும் பெரிய பிரதி நிதித்துவம் கிடைப்பதற்குரிய நற்செய்திகள் கிடைக்கும். இதன் இறுதியில் இதற்குரிய விருதுகளும் பரிவட்டங்களும் உனக்குக் கிடைக்கும். அவனது விருதுகளில் ஒன்றுதான் அவன் செவியேற்கிற செவிப் புலனாகவும், அவன் பார்க்கிற பார்வைப் புலனாகவும், அவன் பிடிக்கிற கையாகவும், அவன் நடக்கிற காலாகவும் நானாகி விடுகிறேன். ஆகவே, என்னைக் கொண்டுதான் அவன் செவியேற்கிறான். என்னைக் கொண்டுதான் அவன் பார்க்கிறான். என்னைக் கொண்டுதான் அவன் பிடிக்கிறான். என்னைக் கொண்டுதான் அவன் நடக்கிறான் என்று ஹதீஸ் குதுஸியில் கூறப்பட்டுள்ள விஷயம்.இது குர்புன்னவாஃபிலின் (நஃபிலான

வணக்கங்களினால் நெருங்குதல் என்பதன்) பயன். அதாவது ஹக்கனின் உதவியால் அடியானுக்கு (தாதீர் அதாவது) குணபாடு செய்யும் சக்தி இருந்து வரும். சர்வ வல்லமையுள்ள அரசனாகிய அல்லாஹுதஆலாவின் கிருபையில் குணபாடு செய்யும் தன்மை அவனில் உண்டாகி விடும். இதனை உணர்ந்து கொள்.

ஸாலிக்கானவன் இந்த மக்காமுக்கு முன்னருள்ள பனாவின் மக்காமை அடைந்தால் உள்ளடக்கிக் கொள்ளல், நிர்ப்பாக்கியனாகுதல், இல்லாததை இருப்பதாக வீண் தாவாச் செய்தல் ஆகியவற்றிற்கு உறைவிடமான மனித ஸ்தூலத்துக் குரிய பழிக்கத்தக்க தனது தன்மைகள் யாவற்றையும் ஒழித்து விடுகிறான். இதற்குத்தான் நஃபிலான வணக்கங்களைக் கொண்டு அவனை நெருங்குதல் என்று சொல்லப்படும். ரியாளத்து (வணக்கத்தில் பயிற்சி பெறல்) முஜாஹதா (அகப்போர் புரிதல்) ஆகியவைகள்தான் நஃபிலானவைகள். ஸாலிக்கானவன் தன்னிடமுள்ள தீய தன்மைகளை அகற்றி விட்டால் அத்தன்மைகள் இருந்த இடத்தில் அவற்றிற்குப் பதிலாக நல்ல தன்மைகளை ஏற்படுத்தி விடுவது அல்லாஹுதஆலாவின் வழக்கமாக இருக்கிறது. இப்படி அவன் செய்ய கடமைப் பட்டில்லை. என்றாலும், அடியான் பாலுள்ள அன்பின் அறிகுறியாக அவன் வெகுமதியாகத்தான் இவ்வாறு அளிக்கிறான். இதுதான் இந்த நூலில் முடிவுரையில் கூறப்படுகிற ஹக்குல் யக்கீன்.

இந்த மக்காமுக்கு قَيُّوم قَيُّوم கய்யூம் கய்யூம் என்ற திக்ருதான் ஏற்பட்டது. இந்த திக்ரில்தான் நீ ஈடுபட வேண்டும். இப்படிச் செய்தால் அப்ரார்கள் செய்யும் நற்காரியங்கள் உனக்கு தீமையானவைகளாகத் தோன்றும். ஏனெனில், நீ முகர்ரபுகளில் ஒருவனாக நீ ஆகி விட்டாயல்லவா? இந்த மக்காமில் நீ ஷரீஅத்து



தரீக்கத்து ஆகியவற்றின் ஒழுங்குகளைக் கடைப்பிடித்தவனாகவே இருந்து ஏழாவது மக்காமை அடைய வேண்டும். மலக்குகள் உண்டாகுவதற்கு முன்னர் ஹக்கீக்கத்தே முஹம்மதிய்யா (முஹம்மதிய அகமியம்) வாக இருந்ததாகிய மனித உருவத்தைக் கொண்டு ஏழாவது மக்காமைத் தேடுபவராகவே நீ இருக்க வேண்டும்.

## ஏழாவது மக்காம்

இதிலுள்ள நஃப்ஸுக்கு நஃப்ஸுல் காமிலா என்று பெயர். இதன் ஸைர் அல்லாஹு தஆலாவைக் கொண்டிருக்கிறது. இதன் ஆலம் ஒற்றையில் அதிகமும், அதிகத்தில் ஒற்றையுமாகும். அதன் மஹல்லு மறைத்தல். ஸ்தூலத்தில் ஆன்மாவுக்கு எவ்விதச் சம்பந்தம் இருக்கிறதோ அவ்விதமான சம்பந்தம் الخفاء அல்கிஃபாஉ (மறைவு) க்கும், والإخفاء வல்கஃபாஉ (மறைத்தலு) க்கும் இருக்கிறது. அதன் வாரிது.மேலே கூறப்பட்டுள்ள நஃப்ஸு களுக்கு இருக்க வேண்டிய புகழத்தக்க சகல நற்குண நல்லொழுக் கங்களாகும். இதற்குத் திறவுகோல் قَهَّار قَهَّار கஹ்ஹார் கஹ்ஹார் என்ற ஏழாவது திக்ருதான். இதுதான் மக்காமத்துகளின் மிகவும் உன்னதமானது. இங்குதான் ஆத்ம அரசாங்கம் பரிபூரண மடைகிறது. முஜாஹதா, ரியாளத்து ஆகியவைகள் இங்குதான் நிறப்பமாகின்றன. இறைவன் திருக்குர்ஆனில்,

إِنَّ اللَّهَ اشْتَرَىٰ مِنَ الْمُؤْمِنِينَ أَنفُسَهُمْ
وَأَمْوَالَهُم بِأَنَّ لَهُمُ الْجَنَّةَ

**நிச்சயமாக அல்லாஹ் மூமின்களிடம் அவர்களுடைய உயிர்களையும் அவர்களுடைய பொருள் களையும் அவர்களுக்கு சுவர்க்கம் இருக்கிறது என்று விலைக்கு வாங்கிக் கொண்டான் 9:111** என்ற ஆயத்தில் சுட்டிக்காட்டி இருப்பது இந்த நிலையைத்தான்.

இந்த மக்காமில் உள்ளவருக்கு அல்லாஹு தஆலாவின் திருப்தியைத் தவிர வேறு நோக்கம் எதுவும் இல்லை. அவரது நடமாட்டங்கள் நன்மைகளாகவே இருக்கும். அவரது மூச்சுகள் தத்துவமாகவே இருக்கும். அவரது உத்தரவு வணக்கமாகவே இருக்கும்.

**அறிந்துகொள்:-** அல்லாஹு தஆலாவின் கஹ்ஹார் என்ற இஸ்முதான் குத்துபுடைய இஸ்மு. பிரகாசங்களையும், நேர்வழிகளையும், விசேஷங்களையும் அழைக்கிற முரீது (சிஷ்யர்) களுக்கு குத்துபாக இருப்பவர் இதிலிருந்துதான் உதவி புரிகிறார். முரீதுகளின் இருதயங்களில் சந்தோஷம், மகிழ்ச்சி, உணர்ச்சி ஆகியவைகள் எப்பொழுதாவது காரணமின்றி உண்டாகுமாயின், அவர்கள் தங்கள் றப்பின்பால் கவனம் செலுத்தி, அவனை திக்ரு செய்ததற்கு பதிலாக, அக்காலத்தில் குத்துபாக இருப்பவர் மூலமாக கிடைக்கும் உதவிதான் இம்மகிழ்ச்சி என்பதாக ஞானாசிரியர்கள் கூறியுள்ளார்கள்.

இந்த மக்காமிலுள்ளவர் வணக்கம் புரிவதைத் தவற விட மாட்டார். இந்த வணக்கம் ஸ்தூலம் முழுவதும் சேர்ந்ததாக இருக்கும் அல்லது நாவால், இருதயத்தால், காலால் மட்டும் சேர்ந்ததாக இருக்கும். அவர் அதிகமாக இஸ்திஃபார் செய்வார் அதாவது பிழை பொறுக்கத் தேடுவார். சிருஷ்டிப் பொருள்களிடத்தில் அவர் சந்தோஷப்படுவது ஹக்குக்காகவே



இருக்கும். அல்லாஹுதஆலாவை விட்டு அவர் பின்வாங் கினால்தான் அவர் கோபமடைவார் கவலையடைவார். அவன் திருப்தியடைவதை அவரும் திருப்தியடைவார். அவன் கோபிப்பதை அவரும் கோபிப்பார். தன் உதிரத்தால் தோன்றிய புதல்வனைப் பார்க்கினும் அதிகமாகவே ஹக்கனைத் தேடுகிற எவரையும் நேசிப்பார்.

அவர் மக்களிடம் நன்மை தீமைகளைக் குறித்து ஏவல் விலக்கல்கள் புரிவார். என்றாலும் அவர்களிடத்தில் அவருக்கு வெறுப்பு இருக்காது. வெறுக்கத் தக்கவரை அவர் வெறுப்பார். என்றாலும், அவ்வெறுப்பு வெறும் நடிப்பாகத்தானிருக்கும். விரும்பத்தக்கவரை அவர் விரும்புவார். அல்லலாஹு தஆலாவைத் தவிர வேறு எதற்கும் அவர் அஞ்சமாட்டார். அல்லாஹு தஆலாவின் விஷயத்தில் பிறரின் கோபத்தையும் பொருட்படுத்தமாட்டார். கோபிப்பது போல நடப்பார். உண்மையில் திருப்தியடைவார். திருப்தியடைந்தது போல் நடப்பார். ஆனால், உண்மையில் கோபமடைந்திருப்பார். என்றாலும், அந்தந்தப் பொருளை அதனதன் தராதரப்படி வைப்பார். அவருடைய முயற்சி ஏதேனும் ஒன்றில் பூர்த்தியாக ஈடுபட்டால் தன்னுடைய நோக்கத்துக்கு இறைவனின் நோக்கம் இணங்கி இருப்பதைக் காண்பார். ஏனெனில், இவரது எண்ணம் இறைவனது எண்ணந்தானல்லவா? அல்லாஹு தஆலா நாடியதைத் தவிர வேறு எதையும் அவர் நாடமாட்டார் அல்லவா? ஆதலால், அவர் எதையேனும் விரும்பி அல்லாஹு தஆலாவிடம் கேட்பாராயின் அதனை அவன் நிராகரிக்க மாட்டான். அதில் அவர் கேட்கும் பிரார்த்தனை இறைவனால் அவசியம் அங்கீகரிக்கப்படும். ஆதலால், அவர் **முஸ்தஜாபுத் தஃவாத்து** (பிரார்த்தனை

அங்கீகரிக்கப்பட்டவர்) களில் ஒருவராக இருப்பார். எனவேதான் பொது மக்கள் பெரியோர்களை நெருங்கி தங்களுக்கு துஆச் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறார்கள்.

## காட்சிகளும் உருவகத் தோற்றங்களும்

இவ்வுலகத்திலுள்ள சிருஷ்டிப் பொருள்கள் யாவற்றினும் மனிதன் மிகச் சிறந்தவன். கண்ணுக்குப் புலப்படுகிற உலகம், அதற்கப்பாலுள்ள உலகம் ஆகிய இரண்டும் அவனிலே அமைந்திருக்கின்றன. இம்மை மறுமை ஆகிய இரண்டிலுமுள்ள யாவற்றின் தன்மைகளும் மனிதனுள் அமைக்கப்பட்டு இருக்கின்றன. எனவேதான் மனிதனை அல்ஆலமுல் அஸ்கர் (சிறு உலகம்) என்று சொல்லப்படுகிறது. ஆகவே, ஞானவழியில் நடக்கும் ஸாலிக்கின் ஆத்ம சக்தி, மனநிலை, அகத்தூய்மை ஆகியவைகள் அவனுக்கு இப்புற உலகிலுள்ள பொருட்களின் வடிவத்தில் கனவிலோ அல்லது தூக்கத்திற்கும் விழிப்புக்கு மிடையிலுள்ள சோக நிலையிலோ காண்பிக்கப்படும். இவ்வழியிற் செல்லும் மாணவன் இக்காட்சிகளின் மூலம் தன் அந்தஸ்தையும் நிலையையும் உணர்ந்து கொள்ளலாம். இங்கு மனிதனின் சில தன்மைகளைப் பற்றிய உருவகத் தோற்றத்தைக் குறித்து சுருக்கமாக எழுதுவோம்.

மனிதனுக்குப் பேராசை அதிக மிருந்தால் அவன் எலியைப் பார்ப்பான். அது கொஞ்சமாக இருந்தால் எறும்பைக் காண்பான்.இவைகள் தன்னைக் கடிப்பதாகவோ. தன்னைத் தாக்குவதாகவோ தோன்றினால், அத்தன்மையின் வலிமையை அறிவிக்கும். அவ்விரண்டும் மரணித்து விட்டதாகக் கண்டால் அல்லது கொல்லப்படுவதாகக் கண்டால் அத்தன்மை அவனில் அழிந்து விட்டது என்பதைக் குறிக்கும்.



உலோபத்தன்மை நாயைப் போலும் குரங்கைப் போன்றும் காட்டப்படும். ஆத்மார்த்தமான வேலைகளில் நாய் மிகப்பலம் பொருந்தியது, புறக்காரியங்களில் குரங்கு பலம் பொருந்தியது. இவைகள் பலமுள்ளவைகளாகவும், மெலிந்து பல மில்லாதனவாகவும் காணப்படும். இவைகள் தன்னைத் தாக்குவதாகவோ, தன்னைக் கடிப்பதாகவோ, ஒன்றுஞ் செய்யாமல் சும்மா இருப்பதாகவோ, மரணித்ததாகவோ, கொல்லப் பட்டதாகவோ தோன்றலாம். இவ்விதம் கண்டால் அவைகள் தன்னில் அதிகமிருப்பதாகவோ, குறைந்திருப்பதாகவோ, ஒழிக்கப்பட்டு விட்டதாகவோ பொருள் கொள்ள வேண்டும்.

இவற்றை எதிர்த்துப் போராடும் சமயத்தில் ஆயுதப் பிரயோகமும் செய்வது போல் கண்டால், அவ்வாயுதம் திக்ருகளைக் குறிக்கும். ஷரீஅத்தில் பழிக்கப்பட்டுள்ள அளவுக்குக் கோபிப்பதை கழுதை உருவத்திலும், பழிக்கத் தகுந்த அளவுக்கு உண்மையை பாம்பு உருவத்திலும் காட்டப்படும்.

குதிரைச் சவாரி செய்வது அவன் பரமார்த்திக வழியில் நடப்பதையும் ஒட்டகையின் மீது சவாரி செய்வது அவனது துணிகரத்தையும், கடலில் கப்பலின் மீது பிரயாணம் செய்யக் கண்டால் கடல் தரீக்கத்தையும், கப்பல் ஷரீஅத்தையும் குறிக்கும். கஸ்தூரி நியாயமான முறையில் சம்பாதிப்பதை அறிவிக்கும். தேன் நற்குணத்தையும், பெண் புத்தியின்மையையும், தாடியைச் சிறைத்தல் அல்லது கத்தரித்தல் மனிதன் ஷரீஅத்தில் பேணுதல் குறைவாயிருப்பதையும் குறிக்கும். உடல் ஊனமுற்றவனைக் காண்பது தான் சொல்வது போல் செய்யாதிருப்பதையும். குருடனைப் பார்ப்பது சாட்சியத்தை மறைப்பதையும், ஊமையைப் பார்ப்பது சத்தியத்தை அறிவிக்காமல்

மறைப்பதையும், ஹல்வா அதாவது இனிப்பு பண்டங்களைக் காண்பது வணக்கத்தில் ஷிர்க்கு சேர்ந்திருப்பதையும், தரகர்களைக் காண்பது பொய்யுரைப்பதையும், இறைச்சிக் கடைக்காரரைக் காண்பது கடின சித்தத்தையும், திருக்குர் ஆனைப் பார்த்தல் அதனை ஓதுதல் ஆகியவைகள் அகத்தில் களங்கமின்மையையும், ஞான ஆசிரியர்களைக் காண்பது தனக்கு வழி காட்டுவதையும், திருமதீனா, திருகஃபா, பைத்துல் முகத்திஸ் ஆகியவற்றைக் காண்பது பாபத்தை விட்டு சுத்தமாகி விட்டதையும், வாள், கத்தி, ஈட்டி, வேல், அறிவாள் போன்றவைகள் ஷைத்தான் வஸ்வாஸ்களையும், ஹூருல்ஈன்கள் மலக்குகள் சுவர்க்கம் ஆகியவைகள் அறிவின் பரிபூரணத் தன்மையையும், அல்லாஹு தஆலாவிடம் நெருக்கத்தை அடைந்திருப்பதையும், சந்திரன் சூரியன் ஆகியவைகள் மஅரிஃபா என்னும் ஞான அறிவுகளையும் குறிக்கும்.

ஸாலிக்கானவனின் நிலை மேற்கண்டவாறாக உருவகத் தோற்றத்தால் அவனுக்குக் காட்டப்படும். ஆதலின், தனது ஞானாசிரியரிடம் அல்லது அறிந்தவரிடம் கேட்டுத் தெரிந்து தன்னைத் திருத்திக் கொள்ள வேண்டும். இதே விதமான கனவுகளை மற்றவர்களும் காண்பர். அவர்களுக்குத் தார்ப்பரியம் வேறு. ஆதலால், கனவு கண்டாலும் மனிதனின் நிலையையும் அந்தஸ்தையும் கவனித்து விளக்கம் சொல்லக் கூடியவர்களிடம் அதனைக் கூறுவது அவசியமாகும்.

அல்லாஹு ஸுப்ஹானஹு வதஆலா களங்கமற்ற இருதயங்களில் இவற்றை உருவகத் தோற்றத்தின் மூலம் அவரவரின் நிலையை உணர்த்துகிறான். ஆதலாற்றான்



“ஸாலிஹானவர் காணும் கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒருபாகம்” என்று சொல்லப்பட்டிருக்கிறது.

“நபித்துவத்தில் முபஷ்ஷராத்து அதாவது நற்செய்தி களைத் தவிர வேறு எதுவும் எஞ்சி இருக்க வில்லை” என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள். அப்பொழுது “நற்செய்திகள் என்றால் என்ன? அல்லாஹ்வின் தூதரே” என்று வினவப்பட்டதற்கு “ஸாலிஹானவனின் கனவு அதனை மூமினானவன் காண்பான் அல்லது அவனைப் பற்றி (மற்றவரிடம்) காட்டப்படும்” என்று கூறினார்கள்.

ஆதலால், மாணவன் ஞானாசிரியரிடம் எதையும் மறைக்காமல் சொன்னால்தான், தன் மாணவனின் தன்மையை உணர்ந்து தக்கவாறு வழிகாட்ட ஞானாசிரியரால் முடியும் தவிர, சில விஷயங்கள் தன் மாணவனிடம் சொல்லத் தகுந்தனவாக இருக்கும். சில தகாதவைகளாகவும் இருக்கலாம். ஆதலால், ஞானாசிரியர் உசிதமானவைகளுக்கு தார்ப்பரியங் கூறுவார். தேவையற்றவைகளுக்கு அவ்வாறு கூறாமலும் இருப்பார். ஆதலால், தார்ப்பரியங் கூறும்படி அவரைக் கேட்க வேண்டிய தில்லை. அவர் கூறுவதைக் கேட்டு விசுவாசத்துடன் நடப்பதுவே இம்மை மறுமைப் பேறுகளைக் கொண்டு வரும்.

**மக்காம்களும் நஃப்ஸுகளும் திக்ருகளும்**

1. முதல் மக்காம்:-

مقام ظلمة الأغيار மக்காமுஸுல் மத்துல் அக்யார்.

நப்ஸு:- النفس الأمارة அன்னஃப்ஸுல் அம்மாரா.

திக்ரு:- لا الٰہ الا اللہ **லா இலாஹ இல்லல்லாஹ்**

2. இரண்டாவது மக்காம்:-

مقام الانوار மக்காமுல் அன்வார்.

நஃப்ஸு:- النفس اللوامة அன்னஃப்ஸுல் லவ்வாமா.

திக்ரு:- اللہ اللہ **அல்லாஹ் அல்லாஹ்**

3. மூன்றாவது மக்காம்:-

مقام الاسرار மக்காமுல் அஸ்ரார்.

நஃப்ஸு:- النفس الملهمة அன்னஃப்ஸுல் முல்ஹிமா.

திக்ரு:- هو هو **ஹூ ஹூ**

4. நான்காவது மக்காம்:-

مقام الكمال மக்காமுல் கமால்.

நஃப்ஸு:- النفس المطمئنة அன்னஃப்ஸுல் முத்ம இன்னா

திக்ரு:- يا حق يا حق **யாஹக் யாஹக்**

حق حق **ஹக் ஹக்** என்றும் திக்ரு செய்யலாம்.

5. ஐந்தாவது மக்காம்:-

مقام الوصال **மக்காமுல் விஸால்**

நஃப்ஸு:- النفس الراضية அன்னஃப்ஸுரர் ராலியயா.



திக்ரு:- **யாஹய்யு யாஹய்யு**

அல்லது حيّ حيّ **ஹய்யுன் ஹய்யுன்** என்றும் திக்ரு செய்யலாம். இத்துடன் யா ஃபத்தாஹ் அல்லது யா வஹ்ஹாப் என்பதையும் சேர்த்துக் கொள்ளலாம்.

6. ஆறாவது மக்காம்:-

مقام تجليات الافعال மக்காமு தஜல்லியாத்தில் அஃப்ஆலீ,

நஃப்ஸு:- النفس المرضية அன்னஃப்ஸுல் மாளிய்யா

திக்ரு:- قيوم قيوم **கய்யூமும் கய்யூமும்** என்றோ யா கய்யூம் யா கய்யூம் என்றோ திக்ரு செய்ய வேண்டும்.

7. ஏழாவது மக்காம்:-

மக்காமு தஜல்லியாத்தில் அஸ்மாயி வஸ்ஸிஃபாத்தி

நஃப்ஸு:- النفس الكاملة அன்னஃப்ஸுல் காமிலா.

திக்ரு:- قهار قهار **கஹ்ஹார் கஹ்ஹார்**

யா கஹ்ஹார் யா கஹ்ஹார் என்றும் திக்ரு செய்யலாம்.

وَصَلَّى اللهُ تَعَالَىٰ وَسَلَّمَ عَلَىٰ خَيْرِ خَلْقِهِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَآلِهِ
وَصَحْبِهِ أَجْمَعِينَ وَالْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ

வ ஸல்லல்லாஹு தஆலா வஸல்லம அலா கைரி கல்கிஹி ஸெய்யிதினா முஹம்மதின் வ ஆலிஹி வ ஸஹ்பிஹி அஜமஈன் வல் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

••••